# காலத்தை வென்றவர்

(புரட்சித் தலைவர்
எம். ஜி. ஆரின் வாழ்க்கைக் கதை)

மணியன்

இமயப் பதிப்பகம்,
20, பெருமாள் தெற்கு வீதி,
நாகப்பட்டினம் - 611 001.

மணியன் எழுதிய

புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஆண்மனம் | ... | 36 - 00 |
| ரசிகன் | ... | 28 - 00 |
| என்ன சுகம்... என்ன சுகம் | ... | 25 - 00 |
| நேரு - ராஜீவ் | ... | 8 - 75 |

விலை ரூ. 5-00


○ முதற் பதிப்பு : அக்டோபர், 1986

○ உரிமை : ஆசிரியருக்கு

○ பதிப்பாளர் : புத்தகப் பித்தன்

○ அட்டை ஓவியம் : உபால்டு

○ அச்சிட்டோர் : கற்பகம் அச்சகம் சென்னை - 2.

### காலத்தை வென்றவர்...

தமிழக முதல்வர் திரு. எம். ஜி. ஆர் அவர்களுக்கு எவ்வளவோ பட்டப் பெயர்கள் உண்டு. நண்பர் திரு. மணியன் அவர்கள் திரு. எம். ஜி. ஆர். அவர்களை 'காலத்தை வென்றவர்' என்று அழைப்பதில் மிகப் பொருத்தமிருப்பதாக எழுதுகிறார். அவர் சிறந்த பத்திரிகையாளர், நாடெங்கும் சுற்றிப் பார்த்து மக்களின் நாடித்துடிப்பை நன்கு அறிந்தவர். அவர் சூட்டும் பெயர் காலத்தை வென்று நிலைத்திருக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

முதல்வர் நியூயார்க் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்த நேரத்தில் நான் நாகப் பட்டினத்திலிருந்து சென்னைக்கு பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். போகும் வழியில் எல்லாம் மக்கள் கூட்டம் கூட்டமாக பால் சொம்புகளுடன் கோயில் நோக்கி சென்று கொண்டிருந்தனர்.

எங்கள் ஜில்லாவில் கோயில் இல்லாத ஊரே இல்லை. வீதிக்கு வீதி ஒரு கோயில் உண்டு. காரைக்கால், ஒழுகமங்கலம், திருக்கடையூர், மயிலாடுதுறை, வைத்தீஸ்வரன் கோயில், சிதம்பரம், பாண்டிச்சேரி வழியாக சென்னை சென்று கொண்டிருந்தேன் சொன்னால் நம்பமாட்டீர்கள், அந்தப் பக்கம் திருவிழாவுக்குக் கூட இவ்வளவு கூட்டம் — இவ்வளவு ஒழுங்காக வந்ததில்லை. எல்லோர் மனதிலும் கவலை குடிகொள்ள "தெய்வமே நீயே துணை" என்று முதல்வர் நலம் பெற பிரார்த்திக்கச் சென்றதைப் பார்த்தேன். பத்திரிகை இந்நிகழ்ச்சியை பத்தி பத்தியாக எழுதின. சின்னவயதிலிருந்தே திருக்கடையூர் வழியாகச் செல்லும்போது அந்தக் கோபுர கலசம் என் நெஞ்சில் பலவித எண்ணங்களை எழுப்பியது உண்டு.

பெற்றோர்களுக்கு ஈசன் ஒரே பிள்ளையை வழங்கி "உங்களுக்கு அறிவாளியாக பதினாறு வயது வாழக் கூடிய பிள்ளை வேண்டுமா? அல்லது முட்டாளாக நூறாண்டு வாழக்கூடிய பிள்ளை வேண்டுமா?" என்று கேட்க, பிள்ளை இல்லாத தாய் தந்தையர் "ஈசாப் மண் பீதிலே மங்கா, புகழுடைய பதினாறு வயது பாலகனை எங்களுக்குத்தா" என்று ஒருசேரக் கடவுளை வணங்கிக் கேட்டனர். அந்தக் குழந்தை பதினாறு வயதை அடைந்து தன் தவ வலிமையாலும், தாய் தந்தையரின் பூஜா பலத்தாலும் காலனை வென்று என்றும் பதினாறு வயதாக வாழ்ந்த வரலாறு என் நினைவுக்கு வந்தது. பெற்ற தாய் தந்தைக்கே செவிமடுத்த ஈசன் நாட்டை ஆளும் அமைச்சர் உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் நேரத்தில் லட்சக்கணக்கான தாய்மார்கள் செய்த பிரார்த்தனைக்கு செவி சாய்க்காமலா போய்விடுவார்?

இன்று நம்மிடையே மார்க்கண்டேயனைப் போல என்றும் பதினாறு வயதாக நம் முதல்வர் வாழ்ந்து வருகிறார். அவருக்கு தாயின் தவ வலியும், அவர் வணங்கும் மூகாம்பிகையின் அருளும், தமிழக மக்களின் நல்லாசியும் எப்போதும் காவல் தெய்வமாக நின்று துணை புரிகின்றன.

இச்சிறு நூலில் மணியன் அவர்கள் முதல்வரின் சாதனைகளை நடுநிலையில் நின்று எழுதியுள்ளார். கட்சிக்காரரர் எழுதுவதைவிட தேச நலனில் அக்கறை கொண்ட மணியனின் யோசனைகள் முதல்வரையே யோசிக்கச் செய்து சிந்திக்க வைத்ததுண்டு. ஒரு எழுத்தாளனுடைய வெற்றிக்கு இது ஒன்றே போதும்.

முதல்வர் காமராஜ் அவர்கள், முதல்வர் பக்தவத்சலம் அவர்களின் புத்தகங்களை வெளியிட்ட இமயப் பதிப்பகம், இப்போது முதல்வர் எம். ஜி. ஆரின் புத்தகத்தை வெளியிடுவதில் பெருமை அடைகிறது.

உங்கள்

**புத்தகப் பித்தன்.**

# காலத்தை வென்றவர்

---

**எம். ஜி. ஆர்!**

இது ஒரு மூன்றெழுத்து மந்திரம்.

தமிழகத்தின் ஒவ்வொரு வீட்டிலும் 'அம்மா' என்ற வார்த்தைக்கு அடுத்தபடியாக — ஏன், 'அம்மா' என்ற பதத்துக்கு மாற்றாகவும்கூட ஒவ்வொருவர் நெஞ்சத்திலும் பேணப்பட்டுவரும் பெயர் அது!

அவர் அந்த அளவு தமிழ்கூறும் நல்லுலகெங்கும் அன்பால் — அருள் உள்ளத்தால் — தயாளத்தால் — தமிழ்ப் பற்றால் — கலையால் — கருணையால்... ஒவ்வோர் உள்ளத்திலும் நிறைந்திருப்பவர் அவர்...

அவரைப்பற்றி எழுத வேண்டுமானால்...? அது என்ன அவ்வளவு சாமானியமான விஷயமா?

யார்தான் அவரைப்பற்றி எழுதவில்லை...? என்ன தான் எழுதவில்லை? ஆனால் ஒன்று...அவரைப்பற்றி யார் என்ன எழுதினாலும், அத்தனை எழுத்துக்களையும் கடந்து நிற்பவர் அவர்.

மாபெரும் கலைஞராக — மனிதாபிமானியாக — மதி நுட்பம் நிறைந்த ராஜதந்திரியாக — நயமான மேடைப் பேச்சாளராக — மேன்மைமிக்க எழுத்தாளராக — வள்ள லாக — வஜ்ர'இதயம்கொண்டு, தன்னைச் சந்திக்கும் இடர் பாடுகளையும் சோதனைகளையும் புறமுதுகு காட்டச் செய்யும் வெற்றி வீரராக... — இப்படிப் பல்வேறு கோணங் களில் ஓர் ஒளி மிகுந்த ஞாயிறாகத் திகழ்பவர் அவர்...

அந்த தனிப்பெருமை மிக்க சூரியனை நட்பு என்ற தூரதர்சினி மூலம் — ஒரு புதுக் கண்ணோட்டத்தில் நான் பார்த்துப் பிரமித்த அனுபவங்களை உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன்.

* * *

இலக்கியத்தில் ஓர் அற்புதமான இடம் உண்டு...

கம்பன் தன் காவியத்தில் அதை வடித்திருக்கிறான்...

இராமபிரான் உலா வரும்போது, 'தோள்கண்டார்; தோளே கண்டார்...' என்கிறார்.

அதாவது, பார்த்தவர்கள் பார்த்துக் கொண்டே இருக்கும்படி ஓர் அபூர்வ வசீகரசக்தி இருந்தது என்பதை அப்படி நயமாகச் சுட்டிக்காட்டுகிறார் கம்பர்.

அதைத்தான் இன்று 'Charisma', 'பிரபை' என்றெல்லாம் சொல்கிறோம்.

இன்று அந்த சாரிஷ்மாவுக்கு ஓர் ஈடற்ற உருவமாகத் திகழ்பவர் யார்?

உலகத்தில் எந்த மூலைக்குச் சென்றாலும் பார்த்தவர்கள் பார்த்துக் கொண்டேயிருக்க—

பார்க்காதவர்கள் பார்த்துவிட வேண்டும் என்று துடிக்க—

எத்தனை முறை பார்த்தாலும் பார்த்துக் கொண்டேயிருக்க—

ஓ...அப்படி ஓர் வசீகரசக்தியுள்ள மாபெரும் மனிதர் யார்?

எம். ஜி. ஆர். அவர்களைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்?

அமெரிக்காவுக்கு அவரோடு சென்றிருந்தபோது—

அவரைப்பற்றி முன்பின் தெரியாத பேராசிரியர்கள், விஞ்ஞானிகள் அவரைப் பார்த்தவுடனேயே ஆர்வம்மிக்க

மனவெழுச்சியுடன், 'அவருடன் பேச வேண்டும்; அவரிடம் விவாதிக்க வேண்டும்' என்று உந்துதலுக்குள்ளாகி அவரிடம் பேசி மகிழ்ந்த காட்சியைக் கண்டிருக்கிறேன்.

மொரீஷியஸ் தீவுக்கு அவருடன் சென்றபோது கண்ட காட்சி...

அவர் சென்ற அதே விமானத்தில் ஒரு செல்வாக்குள்ள மத்திய மந்திரி வந்து இறங்குகிறார்.. ஆனால், கூட்டம் எல்லாம் எம். ஜி. ஆரைச் சூழ்ந்து கொள்கின்றன. மந்திரியை வரவேற்க வந்த கூட்டம்கூட எம். ஜி. ஆரைப் பார்க்கும் கூட்டத்தோடு ஆர்வத்துடன் கலந்து விட்டது.

புது இடங்களில்தான் அப்படி என்றால்—

அவரைப் பார்த்துப் பார்த்து அனுபவப்பட்ட தமிழக மக்களும் சரி — எம். ஜி. ஆர். வருகிறார் என்றால், மணிக் கணக்காக — இரவு பகலாகக் காத்துக் கிடப்பார்கள்.

ஒருமுறை சென்னையிலிருந்து மதுரைக்கு ஒரு மகஜர் கொடுக்கச் சென்றபோது, அவர் சென்ற ரயிலை ஒவ்வோர் இடத்திலும் நிறுத்தி, மக்கள் சூழ்ந்து அன்பைப் பொழிந்த சம்பவம் மறக்க முடியாதது!

ஒரு நிலையில் தான் அந்த ரயிலில் பிரயாணம் செய்வது, மற்ற பிரயாணிகளுக்குச் சங்கடமாக இருக்குமோ என்றுகூட எண்ணினார் எம். ஜி. ஆர். ரயிலி லிருந்து இறங்கி கார்மூலம் பிரயாணத்தைத் தொடருவது என்று முடிவு செய்தார்.

இது எப்படியோ ரயிலின் டிரைவருக்கும் கார்டுக்கும் தெரிந்துபோய், ஓடோடி வந்தார்கள். "ஐயா! ஒரு விண்ணப்பம்... தயவுசெய்து இந்த ரயிலை விட்டு இறங்கிப் போய்விடாதீர்கள். இதில் நீங்கள் வரும் செய்தி மதுரை வரை காட்டுத்தீபோலப் பரவி இருக்கிறது. தொடர்ந்து வழியில் உங்களைச் சந்திக்க வரும் ரசிகர்களுக்கு நீங்கள் இல்லையென்று சொன்னால் பெருத்த ஏமாற்றம் ஏற்படும். உங்களை நாங்கள் ஏதோ மறைத்து வைத்திருப்பதாகவே

எண்ணி கலாட்டா செய்யத் தொடங்குவார்கள்! வண்டி ஒழுங்காக மதுரைக்குப் போய்ச் சேரவேண்டும். பெரிய மனது பண்ணி நீங்கள்தாம் அதற்கு உதவவேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டார்கள். எம். ஜி. ஆரும் சிரித்துக் கொண்டே ஒப்புக்கொண்டார். ரசிகர்களின் கோலாகல வரவேற்புடன் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் நின்று, அன்று பதினேழுமணி நேரம் தாமதமாக அந்த ரயில் மதுரைக்குப் போய்ச் சேர்ந்தது. (காந்திஜி சென்ற ஒரு ரயில்கூட இப்படியொரு சந்தர்ப்பத்தில் பதின்மூன்று மணி நேரம் தான் பிந்திச்சென்றதாக வரலாறு!)

இப்படி ஓர் வசீகரசக்தியின் மையமாக அவர் திகழ்வதற்கு என்ன காரணம்?

எத்தனையோ கோணங்களில் சிந்தித்துப் பார்த்தாலும் அனைத்தையும் கடந்த — அனைத்திலும் நிறைந்த ஓர் அபூர்வ ஆற்றல்மிக்க மகத்தான மனிதர் அவர்!

அந்த ஒரு மனிதருக்குள்தான் எத்தனை எத்தனை உன்னத தனித்தன்மைகள்...

டிஸ்னி உலகத்தில் குழந்தை உள்ளத்துடன் ஒவ்வோர் அம்சத்தையும் கண்டு வியக்கும் கலைஞராக —

நியூயார்க் நகரில் சரித்திரப் புகழ் பெற்ற சின்னங் களையும், கட்டடங்களையும் கண்டு வியக்கும் ரசிகராக —

வெளிநாட்டு பத்திரிகை நிருபர்களிடையே கேள்வி — பதில் பகுதியில் ஆர்வத்துடன் பங்குகொள்ளும் அரசியல் தலைவராக —

அமெரிக்க ஜனாதிபதியின் செயலரிடம் மக்கள் நல்வாழ்வுத் திட்டங்களைப் பற்றி விவாதிக்கும் ஆட்சி யாளராக —

புகழ்பெற்ற குழந்தைகள் மருத்துவ நிபுணர்களிடம் எளிய குழந்தைகளின் எதிர்காலத்தைப்பற்றி ஆலோசிக்கும் மனிதாபிமானியாக —

இப்படிப் பலவிதமாகவும், நான் அவருடன் சென்ற வெளிநாட்டுப் பயணங்களில், அவருடைய சிறப்பான பண்புகளைக் கண்டு பிரமித்திருக்கிறேன்.

தமிழ்நாட்டிலும், அவரோடு நெருங்கிப் பழகிய நண்பர் என்ற முறையில், எனக்கு அவரைப் புரிந்து கொள்ளக் கிடைத்த அபூர்வமான சந்தர்ப்பங்கள் மிகப்பல. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் அவருடைய குணநலங்களை எனக்குக் காட்டி இருக்கின்றன.

ஓர் எழுத்தாளனுக்கு — ஒரு பத்திரிகை ஆசிரியருக்கு — இதைப்போன்ற ஓர் அனுபவம் கிடைப்பது அரிது. அதை இங்கே வாசகர்களுடன் பகிர்ந்துகொள்ளும் முயற்சிதான் இந்தப் புத்தகம்...

**சி**ங்கத்தை அதன் குகையில் சந்திக்கவேண்டும் என்பார்கள்...

அது சாதாரண சிங்கம்.

தான் வாழ்ந்த குகையில் மட்டுமல்லாது, தான் பிரவேசிக்கும் ஒவ்வொரு குகையிலும் வெற்றி கொள் கிறதே, அதுதான் ராஜசிங்கம்!

அப்படி ஒவ்வொரு துறையிலும் ராஜாதிராஜராக வெற்றிமேல் வெற்றி பெற்று ஜெயக்கொடி நாட்டிய வெற்றித் திருமகன், தமிழகத்தின் தனிப்பெரும் வரலாற்று நாயகரான எம். ஜி. ஆர். தான்.

கலையுலகில் அவர் அடைந்த வெற்றி இந்தியத் திரைப்பட வரலாற்றிலேயே எவரும் பெற்றதில்லை. அவர் நடிப்பதை விட்டு ஐந்து ஆண்டுகளுக்கு மேலாகியும், அவர் பல ஆண்டுகளுக்கு முன் நடித்த திரைப்படங்கள் ஒவ்வொன்றும், திரையிட்ட இடங்களில் எல்லாம் — 'ஹவுஸ் புல்'லாக ஓடிக் கொண்டிருக்கின்றன...

அதுபோல் அரசியலிலும்... அவர் தனிக்கட்சி தொடங் கியதுமே நிகழ்ந்த திண்டுக்கல் தேர்தலில் மகத்தான

வெற்றி பெற்று வரலாறு படைத்தார்! இப்படி கலா ரசிகர்கள் மத்தியில் — பொது மக்கள் மத்தியில் தம் ஆற்றலால் அரிய வெற்றிகளைக் குவித்தவர் — உலகில் சுலபத்தில் வெல்ல முடியாதவர்கள் என்று சொல்லப்படும் ஓர் இனத்தின் பேரில் கண்ட வெற்றியை இன்று நினைத்தாலும் எனக்கு வியப்பு கலந்த மகிழ்ச்சியாக இருக்கும்...

அந்த இனம்தான், பத்திரிகையாளர் இனம்...! தமிழகத்திலுள்ள பத்திரிகையாளர்களை மட்டுமல்ல; மிகவும் சிக்கலான வெளிநாட்டுப் பத்திரிகையாளர் களையும் அவர் சந்தித்து, அவர்களைப் பிரமிக்க வைத்த அந்த நிகழ்ச்சிதான்...

மக்கள் திலகம் எம். ஜி. ஆர். அவர்கள் நடித்த 'இதயவீணை' படப்பிடிப்பு ஜெமினி ஸ்டூடியோவில் நடந்து கொண்டிருந்தது. ஒருநாள் நான் மக்கள் திலகத்திடம், ''பத்திரிகை நிருபர்கள் பலர் உங்களைச் சந்திக்க வெகு ஆவலாக இருக்கிறார்கள். ஒரு நிருபர்கள் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்யலாமா?'' என்று கேட்டேன். ''ஏற்பாடு செய்யுங்களேன்! தாராளமாகச் சந்திக்கலாமே?'' என்று உடனே அனுமதி கொடுத்து விட்டார் அவர்.

சுமார் அறுபத்தைந்து பத்திரிகை நிருபர்களுடன், கலகலப்பான பேட்டி ஒன்று ஏற்பாடாயிற்று. மிகச் சுதந்திரமாகக் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முன்வந்தார் அவர். ஒரு கைதேர்ந்த அரசியல்வாதியின் மிகநுட்பமான வாத சாமர்த்தியத்தை அங்கே அப்போது அவரிடம் கண்டேன். 'பளிச் பளிச்' சென்று வந்த பதில்களில் மூன்றை இங்கே கொடுக்கிறேன்...

**ஒரு நிருபரின் கேள்வி:** *உங்கள் வயதுக்கு மிகவும் குறைந்த வயது கொண்ட இளைஞனாக நீங்கள் நடிப்பது பொருத்தமாகுமா?*

எம். ஜி. ஆர்.: திரையில் நீங்கள் என்னைப் பார்க்கும் போது, இளைஞனாக நான் தோன்றுகிறேனா இல்லையா என்பதுதான் என் கேள்வி... இருபது வயது இளைஞன் ஐம்பது வயதுக்காரனாக நடித்தால் பாராட்டுகிறீர்கள் அல்லவா? நான் இருபது வயது வாலிபனாக நடித்தால் ஏன் பாராட்டக்கூடாது? அதற்குப் பெயர்தானே நடிப்பு?

இன்னொரு நிருபரின் கேள்வி: நீங்கள் ஏன் நடிக்கும் பணியிலிருந்து 'ரிடையர்' ஆகக்கூடாது?

எம். ஜி. ஆர்.: 'ஓகோ'வென்று நல்ல வியாபாரம் நடந்து கொண்டிருக்கும் போது யாரும் கடையை மூடுவ தில்லை!

மற்றொரு நிருபரின் கேள்வி: படத்தில் நீங்கள் எதிரி களுடன் சண்டை போடும்போது, பத்து இருபது பேரை ஏக காலத்தில் தனியாகவே நின்று சமாளிக்கிறீர்கள். அவ்வளவு பேரையும் அடித்து வீழ்த்திவிட்டு வெற்றிகரமாக வெளியே வந்து விடுகிறீர்கள். உண்மையிலேயே இது சாத்தியமானதா? நம்பக்கூடியதா?

எம். ஜி. ஆர்.: உங்களைப் பார்த்தால் மதப்பற்று உள்ளவராகத் தெரிகிறது. புராணங்களைப் படித்திருப் பீர்கள் அல்லவா? அவற்றில் வருவதை நம்புகிறீர்கள் அல்லவா?

நிருபர்: படித்திருக்கிறேன், அவற்றை நம்புகிறேன்.

எம். ஜி ஆர்.: மகாபாரதக் கதையில் அபிமன்யு இளம் பிராயத்து வாலிபனாகவே வருகிறான். அனுபவமிகுந்த வில் விற்பன்னர்களுடன் போரிடுகிறான். சிக்கலான வியூகத்தை மிக எளிதாக உடைத்து எதிரிகளை முறியடித்து விட்டுத் திரும்புகிறான். நீங்கள் இதை அப்படியே மனப் பூர்வமாக நம்புகிறீர்கள். வாழ்க்கையை ஒட்டிய திரைப் படத்தில் அத்தகைய சம்பவத்தை ஏன் நீங்கள் நம்பக் கூடாது? அபிமன்யுவால் அப்படிப் பல பேரை ஒரே சமயத்தில் வென்று திரும்ப முடியுமானால், என்போன்ற திரைப்படக் கதாநாயகர்களாலும் அது முடியும்;

இதுபோலவே எம். ஜி. ஆர்., தமிழக முதல்வரான பிறகு, இன்னொரு சிக்கலான நிருபர்கள் கூட்டத்தைச் சந்திக்க நேர்ந்தது. அந்தக் கூட்டம் லண்டனில் நடந்தது. வந்திருந்த நிருபர்கள் யாவரும் பத்திரிகைத் துறையில் நீண்ட நாட்களாகப் பணியாற்றிய ஜாம்பவான்கள்! 'ஸ்டேட்ஸ்மனி'லிருந்து நாயர் வந்திருந்தார். 'அமிருத பஜார் பத்திரிகா'வின் சார்பாக பாட்ஸு வந்திருந்தார். 'ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்' சார்பாக பட் வந்திருந்தார். விறுவிறுப்பாகப் பேட்டி ஆரம்பமாயிற்று...

''இந்திரா காந்தியைச் சிக்மகளூர் தேர்தலில் ஆதரிப்பது முறையா?'' என்று ஒருவர் கேட்டார். 'எமர்ஜென்ஸி'யைக் கொண்டு வந்ததற்காகப் பத்திரிகையாளர் என்ற முறையில், நிருபர் பட் மிகவும் ஆத்திரத்தோடு அந்தக் கேள்வியைக் கேட்டார்.

''இந்திரா காந்தி தமது ஆட்சிக்காலத்தில் எளிய மக்களுக்காகச் செய்த பல நன்மைகளை நம்மால் மறக்க முடியாது. நெருக்கடி நிலையை அவர் செயற்படுத்திய போது, நாட்டில் கட்டுப்பாடும் — ஒழுங்கும் சீராக இருந்தன. வட இந்தியாவில் இதில் சீர்கேடுகள் சில நிகழ்ந் திருக்கலாம். ஆனால், தமிழ்நாட்டில் நன்மைகளே பெருவாரியாகக் கிடைத்தன. தமிழகத்தில் தி. மு. க. வின் முறை தவறிய ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது — நெருக்கடி நிலை இருந்த காலத்தில்தான். இந்திரா காந்தி தி. மு. க. அரசை அப்படி 'டிஸ்மிஸ்' செய்ததற்குப் பெரும்பாலான மக்களின் ஆதரவு இருந்தது. அடுத்த பொதுத் தேர்தலில் தமிழக மக்கள் அதை நிரூபித்துக்காட்டினார்கள். அ தி. மு. க. — காங்கிரஸ் கூட்டணிக்கு நாடாளுமன்றத் தேர்தலில் அமோகமான வெற்றி கிடைத்தது.

''இந்திரா காந்தி ஜனநாயகப் பண்பைக் கைவிட்டவர் அல்ல...இன்னும் ஓராண்டு காலம் அவர் ஆட்சியில் இருந் திருக்கலாம் என்ற உரிமை 1977-ல் அவருக்கு இருந்தது.

ஆனாலும் இந்திரா காந்தி பொதுத்தேர்தலை அறிவித்தார் அல்லவா? தொடர்ந்து அப்படியே அவர் பதவியில் இருந்திருக்கலாம் அல்லவா? மேலும், ஒழுங்காக ஜனநாயகப் பண்பு தவறாமல் நடந்த தேர்தல் அது. இந்திரா காந்தியே தோற்றுப்போனது அதற்குச் சாட்சி அல்லவா?

''இன்னொரு காரணத்துக்காகவும் சிக்மகளூர் தொகுதியில் அவர் வெற்றி பெறுவதை நான் ஆதரித்தேன். 1967-ம் ஆண்டு பொதுத் தேர்தலில் காமராஜர் தோல்வி அடைந்தபோது, எங்கள் தலைவர் அறிஞர் அண்ணா அதற்காக வருத்தப்பட்டார். 'தேசத்தின் மூத்த தலைவர்கள், ஆட்சியிலிருந்து அநுபவம் பெற்றவர்கள் சட்டமன்றத்திலும், நாடாளுமன்றத்திலும் இடம் பெறுவது, நல்லாட்சி நிலைபெறுவதற்கு உதவி செய்யும்' என்று அவர் கருதினார். அந்த நல்ல கருத்தைத்தான் நான் மனத்திற் கொண்டேன். பதினொரு ஆண்டுகாலம் பிரதமராக இருந்து அனுபவம் பெற்றவர் இந்திரா காந்தி. அவர் நாடாளுமன்றத்துக்கு வந்து விவாதங்களில் கலந்து கொள்வது நாட்டுக்கு நல்லது என்று நான் நினைத்தேன்!''

''பத்திரிகை சுதந்திரத்தை இந்திரா காந்தி கட்டுப்படுத்தி இருக்கக்கூடாது. அதுபற்றி என்ன நினைக்கிறீர்கள்...?'' என்று கேட்டார் பட்.

''சிலசமயம் பத்திரிகை சுதந்திரம் என்பது வேடிக்கையாக இருக்கும். முன்பொருசமயம் ஆந்திர மாநிலத்தைப் பிரிக்க வேண்டி இருந்தபோது, சென்னை நகரத்தின்மீது தமிழர்கள், ஆந்திரர்கள் இருவருமே உரிமை கொண்டாடினார்கள். அப்போது பிரபல பத்திரிகை முதலாளி ஒருவர் தமிழ், தெலுங்கு இரண்டு மொழிகளிலும் சென்னையிலிருந்து தினசரிகளைப் பதிப்பித்து வெளியிட்டுக் கொண்டிருந்தார். தெலுங்கு தினசரியில் சென்னை ஆந்திரர்களுக்குத்தான் சேரவேண்டும் என்று தலையங்கம் வெளிவரும்! தமிழ்த் தினசரியிலோ சென்னை தமிழர்களுக்குத்தான் சேரவேண்டும் என்று தலையங்கம் வெளி

வரும்...'' என்று சொல்லி நிறுத்தினார் தமிழக முதல்வர். கூட்டத்தில் 'கொல்'லென்று சிரிப்பு எழுந்தது.

''தி. மு. க.விலிருந்து விலகி வந்து விட்டீர்களே? உங்கள் கொள்கைகளும் அதனால் மாறிவிட்டதா?'' என்று நாயர் கேட்டார்.

''கட்சி மாறினால் கொள்கை அடியோடு மாற வேண்டும் என்ற அவசியம் இல்லை. நல்ல வீட்டில் குடி இருக்கிறோம். அது பழுது பார்க்க முடியாதபடி சிதில மடைகிறது. அப்போது அங்கிருந்து வேறு வீட்டுக்கோ, அல்லது அந்த வீட்டிலேயே நல்ல பகுதிக்கோ போவ தில்லையா? அதைப்போலத்தான் இதுவும்!'' என்று பதில் சொன்னார் எம். ஜி. ஆர்.

எப்படிப்பட்ட கேள்வியானாலும் 'பளிச் பளிச்' சென்று பதில் சொல்லும் அவருடைய திறமையை அன்று திரை உலகப் பேட்டியில் கண்டேன். பின்னர் அரசியல் உலகப் பேட்டியிலும் கண்டேன். வெளிநாடு சென்றபோது அவருடன் பல கூட்டங்களில் நான் இருந்தேன். அவற்றில் பேசும்போது, 'கேள்வி நேரம்' என்றே கொஞ்சநேரம் ஒதுக்குவார். என்ன கேள்வியானாலும், மிக அழகாக ஆணித்தரமாகப் பதில் சொல்லுவார். இந்தத் திறமையைத் தான் நான் அன்று லண்டன் கூட்டத்திலும் காண நேர்ந்தது.

எனக்கு அவருடன் நட்பு தொடங்கிய விதமே விசித்திரமானது. அது நான் 'ஆனந்தவிகடனி'ல் பணி யாற்றிக் கொண்டிருந்த சமயம். அந்த ஆண்டு தீபாவளி மலரில் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனைப் பற்றிய கட்டுரை ஒன்று வெளிவர வேண்டும் என்று ஆசிரியர் தீர்மானித்திருந்தார். ''இந்தக் கட்டுரையை மக்கள் திலகம் என்று ரசிகர்கள் பலரும் பாராட்டும் எம். ஜி. ஆர். எழுது வதுதான் பொருத்தமாக இருக்கும்'' என்று நான் சொன்னேன்.

"உண்மைதான். ஆனால் அவரைச் சந்திப்பதே சிரமம் என்று சொல்லுகிறார்களே...? நிறையப் படப் பிடிப்புகளுக்கு நடுவில் அவருக்குத் தீபாவளி மலருக்குக் கட்டுரை எழுதிக் கொடுக்கும் அளவுக்கு அவகாசம் இருக்குமோ என்னவோ?" என்று சந்தேகப்பட்டார் ஆசிரியர். "எதற்கும் முயன்று பார்க்கிறேன். கட்டுரை அவரிடமிருந்தே கிடைத்தால் மிகவும் நன்றாக இருக்கும்!" என்று சொல்லிவிட்டு நான் கிளம்பிப் போனேன்.

இரண்டு மூன்று இடங்களுக்கு போன் செய்து தெரிந்து கொண்டு, கடைசியில் வாகினி ஸ்டூடியோவில் நடந்த படப்பிடிப்பில் அவரைச் சந்திக்கப் போய்ச் சேர்ந்தேன். தகவல் சொல்லி அனுப்பியபோது, அந்த 'ஷாட்' முடிந்ததும் வருவதாகச் சொல்லி அனுப்பினார். நான் காத்துக் கொண்டு அமர்ந்திருந்தேன்.

"வாருங்கள்! என்ன வேண்டும்?" என்று கேட்டுக் கொண்டே என்னருகில் வந்து அமர்ந்தார் எம். ஜி. ஆர். அதற்கு முன்பு நான் அவரைச் சந்தித்ததில்லை. அவ்வளவு அருகில் பார்த்ததும் இல்லை. கட்டழகும், கம்பீரமும் கொண்ட அவருடைய தோற்றம் ஒருகணம் என்னைப் பிரமிக்க வைத்தது. நான் எனது வேண்டுகோளைக் கொஞ்சம் தயக்கத்துடன் அவரிடம் சொன்னேன். அவர் உடனே பதில் சொல்லவில்லை. கொஞ்ச நேரம் கழித்துப் புன்னகையுடன் கூறினார்...

"உங்களிடம் நான் ஒன்று கேட்க ஆசைப்படுகிறேன். நீங்கள் காங்கிரஸ் கட்சியை ஆதரித்து எழுதுவது எனக்குத் தெரியும். அந்தக் கட்சியின் தலைவர்களைப் பற்றி மிகவும் உயர்வாகவும் எழுதுகிறீர்கள். அதையும் நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், திராவிட முன்னேற்றக் கழகத்தின் மதிப்பிற்குரிய தலைவர்களை — அறிஞர் அண்ணாவையும் கூட எதிர்த்தும், கண்டித்தும் எழுது கிறீர்களே, அது ஏன்?" என்று கேட்டார் எம். ஜி. ஆர்.

''ஸார்! இது எங்கள் பத்திரிகையின் கொள்கையைப் பற்றிய ஒரு கேள்வி. இதற்கு ஆசிரியர்தான் பதில் சொல்ல வேண்டும். நீங்கள் கூறிய கருத்தை அவரிடம் கட்டாயமாக நான் சொல்லுகிறேன். ஆனால், அவர் இப்போது என்னை இங்கே உங்களிடம் அனுப்பியது, தீபாவளி மலரில் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனைப் பற்றி நீங்கள் ஒரு கட்டுரை எழுதித் தரவேண்டும் என்பதற்காகத்தான். அதை நீங்கள் எழுதித் தந்து உதவமுடியுமா?'' என்று நான் பதிலுக்குக் கேட்டேன்.

''இந்த அழைப்புக்கு ஆசிரியரிடம் எனது நன்றியைச் சொல்லுங்கள். ஆனால் கொள்கை அளவில் எனக்கு உடன்பாடில்லாத ஒரு பத்திரிகைக்கு நான் எழுதத்தான் வேண்டுமா என்பது யோசிக்க வேண்டிய விஷயம்!'' என்றார் அவர்.

''ஸார்! இது அரசியல் கட்டுரை அல்ல. கலைவாணரைப்பற்றிய கட்டுரை. அவருடன் நீண்ட நாட்கள் நெருங்கிப் பழகிய நீங்கள் இதை எழுதினால், லட்சக்கணக்கான மக்கள் விரும்பிப் பாராட்டிப் படிப்பார்கள். இது ஒரு கலைப்பணி. அந்த அளவில் நீங்கள் இதை ஏற்றுச் செய்தால் திருப்தியாக இருக்கும். அப்புறம் உங்கள் விருப்பப்படி செய்யுங்கள்!'' என்று சொல்லிவிட்டு எழுந்து வந்துவிட்டேன். 'எழுத முடியுமா என்று பார்க்கலாம்!'' என்று சொல்லியவாறு, அவரும் எழுந்து விடை கொடுத்து அனுப்பி விட்டார்.

திரும்பி வந்து ஆசிரியரிடம் எம். ஜி. ஆரிடமிருந்து கட்டுரை கிடைப்பது ரொம்ப சிரமம் என்று சொல்லி விட்டேன். வேறு யாரையாவது கொண்டு கட்டுரையை எழுதச் செய்வதற்கு மாற்று ஏற்பாடுகளைக்கூடச் செய்தாயிற்று. ஆனால் மறுநாள் இரவு நான் எதிர்பாராத ஒன்று நிகழ்ந்தது. வித்வான் வே. லட்சுமணன் கையில் ஒரு கவரை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். அவரை நான் சந்தித்ததும் அதுவே முதல் தடவை. ''எம். ஜி. ஆர்

உங்களிடம் இந்தக் கட்டுரையைக் கொடுத்துவிட்டு வரும்படி சொல்லி அனுப்பினார்'' என்று கவரைக் கொடுத்தார். எனக்கு ஒரே வியப்பு. உறுதியாகச் சொல்லாத ஒரு பதிலைக்கூட மிகுந்த நேர்மையுடன் மதித்து, வாக்கைக் காப்பாற்றி, குறித்த நேரத்தில் எழுதி அனுப்பிய அந்த எழுத்தாளர் எம். ஜி. ஆரை அப்புறம் வெகுநேரம் மனத்துக்குள் எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தேன்.

மறுநாளே எனக்குப் போன் செய்து, ''கட்டுரை எப்படி இருந்தது?'' என்று கேட்டார் எம். ஜி. ஆர். தீபாவளி மலர் வெளிவந்ததும் கொண்டுபோய்க் கொடுத்தேன். அதைப் பக்கம் பக்கமாகப் புரட்டிப் பார்த்து ரசித்துப் பாராட்டினார். தன்னுடைய கருத்துக்களிலிருந்து மாறுபட்டவர்களிடமும் மிகுந்த மரியாதையும், மதிப்பும் கொண்டவர் எம். ஜி. ஆர். இதை அவருடன் மேலும் பழகப் பழக நான் நன்கு தெரிந்து கொண்டேன்.

* * *

எம். ஜி. ஆர். —இந்த மூன்று எழுத்துக்கள் உலகத்தின் கவனத்தைக் கவர்ந்தவை. இந்த எழுத்துக்களைக் கொண்ட புகழ்பெற்ற இந்திய நடிகரைப்பற்றி, உலகப் புகழ் பெற்ற 'ரீடர்ஸ் டைஜெஸ்ட்' அன்று எழுதிற்று: 'திரை உலகிற்கு வந்து ரசிகர்களைக் கவர்ந்ததோடு இல்லாமல், சமூகப் பணியிலும், அரசியல் உலகிலும் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திய அற்புத மனிதர் அவர்!' என்று அந்தப் பத்திரிகை ஒரு சிறப்புக் கட்டுரையில் குறிப்பிட்டிருந்தது.

இந்த மூன்று எழுத்துக்கள் — மருதூர் கோபாலன் ராமச்சந்திரன் என்பதைக் குறிக்கும். கேரள மாநிலத்தில் பாலக்காடு மாவட்டத்தில் உள்ளது மருதூர். கொங்குச் சீமையைச் சேர்ந்த சேனாதிபதி குடும்பத்தைச் சேர்ந்த மன்றாடியார் பரம்பரையில் வந்தவரே கோபாலன். அவருடைய மகன்தான் ராமச்சந்திரன்.

இலங்கையில் உள்ள கண்டி என்ற தமிழர்கள் அதிகமாக வசிக்கும் நகரில், நீதிபதியாகப் பணிபுரிந்தவர் கோபாலன். தந்தை ஆற்றிய பணியில் கடைப்பிடித்த நீதிக்கு மரியாதை செலுத்தும் பண்பும், பரம்பரையாக வந்த படையாளும் வீரமும் ராமச்சந்திரனின் இரத்தத்தில் சிறு வயதிலிருந்தே ஊறிப் போயிருந்தன.

மருதூர் கோபாலனின் ஐந்து குழந்தைகளில் கடைசியில் மிஞ்சியிருந்தவர்கள்—எம். ஜி. சக்கரபாணி, எம். ஜி. ராமச்சந்திரன் ஆகிய இருவர் மட்டும்தான். தந்தையின் மறைவுக்குப் பிறகு, தாய் சத்யபாமாவின் துணையுடன் தமிழ் நாட்டுக்கு இரு குழந்தைகளும் வந்து சேர்ந்தார்கள். அப்போது அண்ணன் சக்கரபாணிக்கு ஏழு வயது; தம்பி ராமச்சந்திரனுக்கு மூன்று வயது.

அந்தச் சிறிய — எளிய குடும்பம் கும்பகோணத்திற்கு வந்து சேர்ந்தது. குழந்தைகள் ஆனையடிப் பள்ளியில் சேர்க்கப்பட்டார்கள். 'தந்தை இல்லாவிட்டால் குழந்தைகள் சரியானபடி வளரமாட்டார்கள்' என்ற கருத்து நம்முடைய சமூகத்தில் உண்டு. அதை மனத்தில் வைத்துக்கொண்டு மிகுந்த அக்கறையுடன் இரண்டு குழந்தைகளையும் மிகவும் கண்டிப்பாகவே வளர்த்தார் அன்னை சத்யபாமா.

''என்னுடைய தாய் பெயருக்கேற்றபடி சத்தியத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்டவர். குழந்தைகளை ஒழுக்கம் தவறாமல் நல்ல பண்புடன் உருவாக்கவேண்டும் என்று மிகவும் சிரமப்பட்டார். அந்த நாளில் நாங்கள் ஒரு வேளைகூட ஒழுங்காகச் சாப்பிடாமல் இருந்ததுண்டு. ஆனால், அந்த நிலையிலும் எங்களுக்குப் பண்பு நழுவிய செயல் எதையும் செய்யத் தோன்றியதே இல்லை'' என்று எம். ஜி. ஆர். என்னிடம் சொல்லுவதுண்டு.

குழந்தைப் பருவத்திலேயே பார்க்க மிகவும் அழகாக இருப்பார் எம். ஜி. ஆர். பவுன் நிறத்தில் உடம்பும், குறுகுறு வென்ற பார்வையும், பூத்தமலர்ச் சிரிப்புமாகப்

பார்ப்பவர்களைக் கவரும் குழந்தையாக வளர்ந்தார் அவர். அந்த வயதுக்கேற்ற பிடிவாதமும், சண்டை பிடிக்கும் குணமும் அவரிடம் இருந்தன. ஆனாலும், அண்ணனுக்கும் — அன்னைக்கும் அவரிடம் அலாதியான பிரியம் உண்டு. தனக்குப் பிறந்த இரண்டு பெண்குழந்தை களையும் இழந்துவிட்ட அன்னை, அவருக்குப் பெண் குழந்தையைப்போலத் தலை பின்னி, பூச்சூட்டி மகிழ் வாராம். அழகான குழந்தை யல்லவா? அதுவும் பொருத்த மாக இருக்கும் அவருக்கு!

விளையாட்டிலும் எம். ஜி. ஆர். மிகவும் கெட்டிக் காரர். அந்தச் சிறுவயதிலேயே எல்லா விளையாட்டிலும் அவர் மற்றவர்களை மிஞ்சிவிடுவார். அதிலும், 'சடுகுடு' விளையாட்டில் அவருக்குத் தனியான திறமை உண்டு. அயராமல் மூச்சுப்பிடித்துத் தன்னுடன் போட்டி போடும் அவ்வளவு பேரையும் புரட்டிப் போட்டு விடுவார்.

எம். ஜி. ஆருக்கு ஏழு வயதாக இருக்கும்போது, மூன்றாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்த அந்தச் சிறுவனை வேலைக்கு அனுப்பவேண்டிய நிர்ப்பந்தம் அந்தக் குடும்பத்துக்கு ஏற்பட்டது. பாண்டிச்சேரியில் நாடகம் நடத்திக் கொண்டிருந்த மதுரை பாய்ஸ் கம்பெனி யில் வேலை தேடி அண்ணனுடன் அவர் போக வேண்டிய தாயிற்று.

மாமன் நாராயணனுடன் இரு குழந்தைகளும் ரயிலில் ஏறிவிட்டார்கள். கும்பகோணம் ரயில்நிலையத்தில் வழி யனுப்ப வந்திருந்த தாய்க்குக் கண் கலங்கிற்று. தன்னைப் பார்த்துக் குழந்தைகள் அழக்கூடாது என்ற மனஉறுதி யுடன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டார் அன்னை சத்யா. ஆனால் மாமன் சொன்ன ஆறுதலும், அண்ணனின் பரிவும் அந்த ஏழு வயதுச் சிறுவனின் துயரத்தை அடக்க முடியவில்லை. அம்மாவுக்காக ஏங்கி ஏங்கி அழுதபடியே கண்ணயர்ந்து, அண்ணனின் மடியில் கழித்த முதல் இரவுத் தூக்கம்.

" ஒன்றே குலமென்று பாடுவோம்
ஒருவனே தேவனென்று போற்றுவோம்
அன்னை இதயமாக அன்பு வடிவமாக-வந்து
வழிகாட்ட வேண்டுமென்று வணங்குவோம்!"

நான் தயாரித்த 'பல்லாண்டு வாழ்க' திரைப் படத்தில் எம். ஜி. ஆர். பாடியுள்ள பாடல் இது. அந்தச் சிறுவயதிலேயே அந்தக் குழந்தை அன்பு வடிவமான அன்னையின் வழிகாட்டுதலை நம்பி வேலை தேடிப் புறப் பட்டிருக்கவேண்டும்...

பாய்ஸ் கம்பெனி முதலாளி சச்சிதானந்தம்பிள்ளை கண்டிப்பு மிகுந்தவர். நாடகக்குழு நன்றாக இருக்க வேண்டும் என்றால், எல்லோரும் மிகுந்த கட்டுப் பாட்டுடன் வளரவேண்டும் என்று நம்புகிறவர். காலையில் ஐந்து மணிக்கே குழந்தைகளைத் தட்டி எழுப்பி விட்டு விடுவார். காலைக் கடன்களை முடித்துவிட்டு, தேகப் பயிற்சி செய்யவேண்டும். பிறகு நாடக வசனத்தைப் படித்து மனப்பாடம் செய்யவேண்டும். அது முடிந்ததும் சிற்றுண்டி கிடைக்கும். தொடர்ந்து நடனப் பயிற்சி, பாடல் பயிற்சி, நாடக ஒத்திகை — இப்படி நடக்கும். இரவில் நாடகத்தில் நடிக்கவேண்டும்.

எம். ஜி. ஆர். நடித்த முதல் நாடகம் 'மகாபாரதம்'. அதில் உத்தரன் என்ற பாத்திரத்தில் அர்ஜுனனுக்குத் துணையாகப் பழகும் இளவரசனாக நடித்தார். அர்ஜுனன் எய்த அம்புகளைக் காட்டில் புதரில் புகுந்து தேடி எடுத்துக்கொண்டு வரவேண்டியது உத்தரனின் வேலை. அதில் பாம்பைக் கண்டு பயப்படுவதைப் போலக் கூச்சலும் போடவேண்டும்! இதை மிக நன்றாகவே, இயற்கை யாகவே நடித்துக் காட்டினார் எம். ஜி. ஆர். எதற்கும் கலங்காத—அஞ்சாத உள்ளம் கொண்டவர், பயந்து அலறும் பாத்திரத்தைச் சிறப்பாகவே நடித்துக் காட்டினார். அதைப் பாராட்டிய முதலாளி, அவரை

முறையாக மாதச் சம்பளத்தில் அமர்த்திக் கொண்டார். சம்பளம் எவ்வளவு தெரியுமா? மாதம் ஐந்து ரூபாய்!

அது அவ்வளவு பெரிய தொகை அல்ல. ஆனால், அதனால் அந்தச் சிறுவன் அடைந்த மகிழ்ச்சியோ மிகப் பெரியது. அந்த ஐந்து ரூபாயும் அப்படியே அம்மாவுக்கு அனுப்பப்படும் என்பதை எம். ஜி. ஆர். தெரிந்து கொண்டார். 'நான் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டேன். இனி என்னுடைய தாயை நான் சம்பாதித்துக் காப்பாற்று வேன்' என்ற சுயநம்பிக்கை அந்தக் குழந்தை உள்ளத்தில் துளிர்த்தது. படிப்படியாக நடிப்பு உலகில் உயர்ந்து, தாயாருக்கு நிறையச் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும் என்ற ஆசையும் உண்டாயிற்று.

பாய்ஸ் கம்பெனியிலிருந்து பிரிந்து வந்து எம். கே. ராதாவின் (ஜெமினியில் நடித்துப் புகழ் பெற்ற) தந்தை எம். கந்தசாமி முதலியாரிடம் வந்து சேர்ந்தார்கள் எம். ஜி. ஆரும்—அவரது அண்ணனும். கந்தசாமி முதலியார் மிக நயமான பண்பு கொண்டவர். அவரிடம் மிகுந்த மரியாதை கொண்டு அமரர் வாசன் பழகியது எனக்குத் தெரியும். பலமுறை அவரைப் பற்றிப் பாராட்டி வாசன் அவர்கள் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன்.

எம். ஜி. ஆர். அதேபோல எம். கே. ராதாவை மிகுந்த மரியாதையுடன் 'அண்ணன்' என்று குறிப்பிடுவதை நான் கேட்டிருக்கிறேன். அவருடைய நடிப்புலக வாழ்க்கையில், ஆரம்ப நாட்களில் அவருக்கு நல்ல அறிவுரைகள் கூறி வழிப் படுத்திய ஒருவராக எம். கே. ராதாவை அவர் மதித்துப் போற்றி இருக்கிறார்.

முதலியாரின் கம்பெனி நடிகர்களும், நிர்வாகிகளும் ரங்கூன் செல்வதற்குக் கப்பல் பிரயாணம் செய்யப் புறப்பட்டார்கள். கடலைப் பார்த்துப் பயப்படுகிற குழந்தைப் பருவம் எம். ஜி. ஆருக்கு! தூக்கம் வராமல் சற்று அச்சத்துடன் கண்விழித்து உட்கார்ந்திருந்த அவரை,

'என்ன ராமு... இன்னும் தூங்கவில்லையா?' என்று கேட்டு, முதுகில் தட்டிச் சமாதானப்படுத்தினார் எம். கே. ராதா.

அந்தப் பயணத்தை இரண்டு மாதங்களில் முடித்துக் கொண்டு திரும்பி வந்து சேர்ந்தார் எம். ஜி. ஆர் அப்போது அவருடைய கவனத்தைக் கவர்ந்தவர் — ராஜபார்ட் நடிகராகத் திகழ்ந்த சின்னசாமி என்ற பி. யு. சின்னப்பா. சின்னப்பா பார்ப்பதற்குக் கம்பீரமான உருவம் கொண்டவர். கணீர் என்ற குரலில் பாடக்கூடியவர். உருக்கமாக நடிக்கக் கூடியவர். அந்த நாளில் நாடக மேடையில் தோன்றி வெற்றிகரமாக நடிப்பதற்கு, ஒரு கதாநாயகனுக்கு வேண்டிய அத்தனைப் பண்புகளும் அவருக்கு இருந்தன.

ஒரு சமயம் 'தசாவதாரம்' நாடகத்தில் சின்னப்பா பரதனாக நடிக்க வேண்டி இருந்தது. ஆனால் தொண்டை கட்டிக் கொண்டிருந்ததால், அவரால் பேசிப் பாடி நடிக்க முடியவில்லை. அதனால், அந்தப் பாத்திரத்தை எம். ஜி. ஆர். ஏற்று நடிக்க வேண்டியதாயிற்று. நாடகம் முடிந்ததும் அவரைக் கூப்பிட்டு கட்டியணைத்துப் பாராட்டினார் — அன்று நாடக உலகத்தில் மன்னனாகத் திகழ்ந்த ஒரு நடிகர். அவர் யார் தெரியுமா? எஸ். ஜி. கிட்டப்பாவேதான்!

சின்னப்பா அந்தக் கம்பெனியிலிருந்து விலக நேர்ந்தது. முக்கிய வேடங்களில் நடிக்கும் வாய்ப்பு எம். ஜி. ஆருக்குப் படிப்படியாகக் கிடைத்தது. பலமுறை கதாநாயகனாகவும் நடித்தார்.

காங்கிரஸ் இயக்கம் நடத்தி வந்த சுதந்திரப் போராட்டம் அப்போது அவரை வெகுவாகக் கவர்ந்தது. தூய கதர் வேஷ்டி — கதர் ஜிப்பா இவற்றை அணிந்த கோலத்தில் எப்போதும் காட்சி அளிப்பார் எம். ஜி. ஆர்.

பதினேழு வயது இளைஞரான அவருடைய உள்ளத்தில் ஆழமாகப் பதிந்து நின்ற தியாகசீலர் — வங்காளம் தந்த சிங்கம் சுபாஷ் சந்திரபோஸ்தான். நாடகத் துறையில் பல

நாடக முன்னணி நடிகர்களுடன் நடித்துப் பெயர் வாங்கிய எம். ஜி. ஆருக்கு, திரைப்படங்களில் நடிக்கும் வாய்ப்பும் கிடைத்தது. 'சதிலீலாவதி' என்ற படத்தில் — பத்தொன்பது வயதில் முதன் முதலாக — இன்ஸ்பெக்டராக நடித்தார் அவர்.

திரைப்பட உலகில் அவருக்குக் கிடைத்த அனுபவங்கள் பலவிதமானவை. இவற்றைப் பற்றி அவரே தனது சுய சரிதத்தில் இப்படிக் குறிப்பிடுகிறார்:

"படத்தில் நடிக்க எங்கேயாவது வாய்ப்பு கிடைக்காதா என்று நான் ஏங்கித் தவித்ததும் உண்டு. அதிகப் படங்களில் நடிக்க வேண்டி இருந்ததால் வேலை செய்ய நேரம் போதவில்லையே என்று வேதனைப்பட்டதும் உண்டு.

"நண்பரிடம் கடன் வாங்கிக் காலத்தைக் கழித்த நாட்களும் உண்டு. பிறருக்கு உதவக்கூடிய அளவுக்கு வருவாய் வந்த நாட்களும் உண்டு. என்னை வைத்துப் படம் எடுத்த முதலாளிக்கு நான் கடன் கொடுத்ததும் உண்டு. சினிமாத் துறையில் உள்ள சிலர் நான் நடிப்புத் தொழிலில் சரியாக ஒத்துழைப்பதில்லை என்று என்னைக் குறை கூறிய காலமும் இருந்தது. 'ஒத்துழைக்கும் நடிகர்களில் ராமச்சந்திரனை விடச் சிறந்தவர்கள் இல்லை!' என்று புகழ் பாடப்பட்ட காலமும் இருந்தது. படத் தயாரிப்பாளரின் ஒப்பந்தத் தாளில் எப்படிப்பட்ட உறுதிமொழிகள் இருந்தாலும், மறுப்பே கூறாமல் கையெழுத்திட்டதும் உண்டு. என் இஷ்டப்படி அவை எழுதப்பட்டுப் பட முதலாளிகள் என்னோடு ஒப்பந்தம் செய்து கொண்டதும் உண்டு."

உண்மைதான். தானே தயாரிப்பாளராகவும் இருந்திருக்கிறார். தன்னுடைய படத்தைத் தானே இயக்கியும் இருக்கிறார். என்னைப் போலப் பத்திரிகைத் துறை போதும் என்று இருந்தவனை, திரைப்படம் தயாரிக்க வைப்பதற்கும் தூண்டுகோலாக விளங்கி இருக்கிறார்.

அந்த நிகழ்ச்சி இப்போதும் என்னுடைய மனதில் பசுமையாக இருக்கிறது.

என்னுடைய நாவலான 'இதயவீணை'யைப் படமாக்கினால் நன்றாக இருக்கும் என்று எண்ணி, நானும் என்னுடைய அருமை நண்பர் வித்துவான் லட்சுமணனும் சில படத் தயாரிப்பாளர்களை அணுகி விசாரித்துக் கொண்டிருந்தோம். ஆனால் ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. இதைப் பற்றி வித்துவான் ஒருநாள் எம். ஜி. ஆரிடமே சொல்லிக் குறைப்பட்டுக் கொண்டார்.

''மற்றவர்களைக் கேட்பானேன்? நீங்களே எடுக்க வேண்டியதுதானே...?'' என்றார் எம். ஜி. ஆர். ஒரு புன்னகையுடன். நாங்கள் மலைத்துப் போனோம்! ஆனால், அவர் வெகுநிதானமாகவே சொன்னார்: ''நீங்கள் இருவருமே ஒரு படத் தயாரிப்பு நிறுவனத்தைத் தொடங்குங்கள். ஒரு புதிய தயாரிப்பு நிறுவனம் உதயமாகட்டும். அதற்கு 'உதயம் புரொடக்ஷன்ஸ்' என்றே பெயர் வையுங்கள்!'' என்று மேலும் தூண்டி விட்டார்.

'நம்மால் ஆகுமோ?' என்று நாங்கள் தயங்கிக் கொண்டிருந்தோம். ஆனால் அவர் விடவில்லை. மீண்டும் நினைவூட்டிச் சொல்லி அனுப்பினார். அப்போது நான் தியாகராய நகரில் ராமச்சந்திர ஐயர் தெருவில், ஒரு வாடகை வீட்டில் குடி இருந்தேன்.

ஒருநாள் நான் சற்றும் எதிர்பாராத விதமாக அங்கேயே வந்துவிட்டார் எம். ஜி. ஆர். வரவேற்கவோ, உபசரிக்கவோ வகையறியாத நான் திண்டாடிப் போனேன். அவர் சுவாதீனமாக வந்து உட்கார்ந்து கொண்டு, ஒரு 'ஸ்வீட்' சாப்பிட்டுவிட்டு, ''எங்கே? ஒரு காகிதமும் பேனாவும் கொண்டு வாருங்கள்!'' என்று கேட்டார். கொண்டு வந்து கொடுத்தேன்.

''தாயே துணை'' என்று எழுதி, அதன் அடியில், ''உதயம் புரொடக்ஷன்ஸ்'' என்று எழுதிக் கையில் கொடுத்துவிட்டுப் புன்னகை செய்தார் எம். ஜி. ஆர். 'உதயம் புரொடக்ஷன்ஸ்' உதயமாயிற்று. பல்வேறு மொழிகளில் பல படங்களை நாங்கள் எடுத்தோம். முதல்

படமான 'இதயவீணை'யில் அவரே நடித்தார். அது நூறு நாட்கள் ஓடிற்று.

ஆஸ்திரேலியாவுக்கு நான் போயிருந்தபோது அங்கே ஜான்மெக்காலம் என்ற புகழ் பெற்ற திரைப்பட டைரக்டர் ஒருவரைச் சந்தித்துப் பேசினேன். அவர் இந்தியாவைப் பற்றிப் பேசியபோது, தமிழ்நாட்டில் ஏராளமான தமிழ் மக்களின் அன்பைப் பெற்ற எம். ஜி. ஆரைப் பற்றிக் குறிப்பிட்டார். தமிழகத்துக்கு வந்து அவரை நேரில் சந்திக்கவும் விரும்பினார். அதை நான் தமிழ்நாட்டுக்குத் திரும்பியதும் எம். ஜி. ஆரிடம் சொன்னேன். வழக்கமான புன்னகையுடன், "வரச் சொல்லி எழுதுங்கள்! வந்து என்னுடைய விருந்தாளியாகவே தங்கவேண்டும் என்று எழுதுங்கள்!" என்றார் எம். ஜி. ஆர்.

சென்னைக்கு வந்து அவருடைய விருந்தினராகத் தங்கினார் ஜான்மெக்காலம். அவரைத் தன்னுடைய காரிலேயே மாமல்லபுரத்துக்கு அனுப்பி வைத்தார் எம். ஜி. ஆர். மாமல்லபுரத்தில் உள்ள ஏராளமான எளிய மக்களுக்கு எம். ஜி. ஆரின் கார் நம்பர் தெரியும். கார் அருகில் போய் நின்றுகொண்டு பலரும் எங்களை விசாரிக்கத் தொடங்கினார்கள். சங்கு, மணிமாலை, சிற்ப வேலைப்பாடுகள் — இப்படிப் பலவற்றையும் கொண்டு வந்து ஜான்மெக்காலத்திடம் கொடுத்தார்கள். அவர் அந்த வரவேற்பையும், உபசரிப்பையும் ஆச்சரியத்துடன் கண்டு வியந்து கொண்டிருந்தார்.

"வாத்தியார் காருடா! அவுங்க விருந்தாளிங்கடா!" என்ற குரல் மாறி மாறி ஒலித்தது. "வாட் ஈஸ் திஸ் வெர்ட்?" என்று கேட்டார் அவர். "வாத்தியார் என்றால் டீச்சர் என்று வைத்துக் கொள்ளலாம். எளிய மக்கள் பலரும் அவருக்கு வைத்த அபிமானப் பெயர் அது! எம். ஜி. ஆர். தன்னுடைய படங்களில் இவர்களுக்கெல்லாம் புரியும்படி நல்லொழுக்கங்களை எளிமையாகப்

போதிப்பார். அதனால் அவரே வாத்தியார் ஆகிவிட்டார்!'' என்றேன்.

''இட் ஈஸ் பெண்டாஸ்டிக்!'' என்று கூறித் தாம் வாங்கிய பொருட்களுக்குப் பணம் கொடுக்கப் பர்ஸை எடுத்தார் அவர். ஆனால், யாராவது பணத்தை வாங்கிக் கொண்டால்தானே? 'எங்க வாத்தியார் விருந்தாளி நீங்க! உங்ககிட்டே பணம் வாங்கிக் கொள்வதாவது?' என்று சொல்லிக் கரம் குவித்து மரியாதையுடன் வழி அனுப்பி வைத்துவிட்டார்கள்.

''இப்படி ஒரு 'சாரிஸ்மா' வா? இதைப்போல நான் பார்த்ததே இல்லை மணியன்! மக்களுடன் எப்படிக் கலந்து போயிருக்கிறார் இந்த அதிசய மனிதர்?'' என்று வியந்து போய் உட்கார்ந்து விட்டார் ஜான்மெக்காலம்.

ஏழை எளிய மக்களிடம் எம். ஜி. ஆர். எவ்வளவு தூரம் புகழ் பெற்றிருந்தார் என்பதைப் பலமுறை கண்ட எனக்கே அது பிரமிப்பாக இருக்கும். வெளிநாட்டிலிருந்து வந்த அந்த மனிதர் அப்படி வியப்படைந்ததில் ஆச்சரியம் இல்லையே?... அந்த எளிய மக்களின் அன்பும், ஆதரவும் தானே அவரை 'மக்கள் திலகம்' என்று பாராட்டி வாழ்த்த வைத்தது! பின்பு தங்களைக் காக்கும் முதல்வராகவும் பதவியில் அமர வைத்தது!

ஜப்பானில் 'எக்ஸ்போ-70' நடந்து கொண்டிருந்தது. அங்கே சென்று அந்த இடத்தில் தனது 'உலகம் சுற்றும் வாலிபன்' படத்துக்காகச் சில காட்சிகளைப் படமாக்க விரும்பினார் அவர். அங்கே சென்று அரசாங்க அதிகாரிகளிடம் அனுமதி பெறுவது, காவல் கட்டுப்பாடுகளுக்கிடையில் படம் எடுப்பது, பிரும்மாண்டமான மக்கள் கூட்டத்துக்கு இடையே படப்பிடிப்பு நடக்க ஏற்பாடு செய்வது ஆகியவை பலருக்குத் தயக்கத்தை உண்டு பண்ணின.

''எளிதில் சாதிக்க முடியாத ஒன்றை முடித்துக் காட்ட வேண்டும். அதில்தான் சுவாரசியம் இருக்கிறது. நீங்கள்

ஏற்கெனவே ஜப்பானுக்குப் போய் வந்திருக்கிறீர்கள். நீங்கள் அங்கே போய் முயன்று பாருங்கள்!'' என்று எனக்கு ஊக்கம் தந்து அனுப்பினார் எம். ஜி. ஆர்.

ஜப்பானுக்குச் சென்று, கடுமையாக முயன்று எப்படியோ அனுமதி வாங்கிவிட்டேன். அங்கே திரைப் படம் எடுக்க அனுமதி பெற்ற ஒரே படத்தயாரிப்பாளர் என்ற பெயருடன், டோக்கியோ நகர ஹனீதா விமான நிலையத்தில் வந்து இறங்கினார் அவர். விமான நிலையத்தில் தமிழன்பர்கள் சிறுகூட்டமாகக் கூடி இருந் தார்கள். டோக்கியோவில் கிடைப்பதற்கரிய மாலை களைக்கூடத் தயார் செய்து கொண்டு வந்திருந்தார்கள். எம். ஜி. ஆர். வந்து இறங்கினார். எப்படி என்கிறீர்கள்?... சென்னையில் அணிந்திருக்கும் அதே உடையுடன்தான்! அதே வேஷ்டி, ஜிப்பா, குல்லாவுடன் வந்து இறங்கிய அவரைப் பார்த்து, நான்கூடப் பிரமித்துப்போனேன்.

படப்பிடிப்பு வெற்றிகரமாகவே நடந்து முடிந்தது. 'எப்படியாவது படப்பிடிப்பை நடத்திட வேண்டும்!' என்று அன்று சொன்னவர், அதை முடித்தே காட்டிவிட்டார்! அது எம். ஜி. ஆரின் அலாதியான பண்புகளில் ஒன்று. எந்தக் காரியத்தையும் தீர ஆலோசித்தே முடிவு செய்வார். முடிவு செய்து காரியத்தில் இறங்கிவிட்டால், அப்புறம் அவரிடம் தயக்கமே இராது. இந்த மனஉறுதியும், விடாமுயற்சியுமே இன்று அவரைத் தமிழகத்தின் மிக உயர்ந்த தலைவராக உயர்த்தி வைத்திருக்கிறது.

டோக்கியோ நகரில், இந்திய தூதரகத்தில் பணிபுரிந்து கொண்டிருந்த நண்பர் ஜெயராமன், எம். ஜி. ஆருக்கு வயிறுகுளிர தயிர்சாதம் அளித்து உதவினார். அவரை வாழ்த்திவிட்டுத் திரும்பி வந்தவரை, அதன் பிறகு மீண்டும் தமிழக முதல்வர் என்ற முறையில் சந்திக்க வந்து சேர்ந் தார் ஜெயராமன். ஏழு ஆண்டு இடைவெளிக்குப் பிறகு நடந்த நிகழ்ச்சி அது. மிகப்பெரும் வெற்றியை எட்டிய அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின்

தலைவரான எம். ஜி. ஆர்., தமிழக முதல்வராகப் பதவி ஏற்கப் போவதை ஒட்டி, பல்வேறு துறைகளைச் சேர்ந்த பெரிய அதிகாரிகள், பிரமுகர்கள், தொழிலதிபர்கள் எல்லோரும் நூற்றுக்கணக்கில் வந்து காத்துக் கொண் டிருந்தார்கள்.

நான் அவருடன் கூடவே இருந்து, ஒரு செயலாளரைப் போல என்னுடைய எளிய பணியைச் செய்து கொண்டிருந் தேன். அப்போது அவரிடம், ''டோக்கியோ ஜெயராமன் வந்திருக்கிறார். உங்களைப் பார்த்து வாழ்த்துக்களைச் சொல்லிவிட்டுப் போக ஆசைப்படுகிறார்!'' என்றேன்.

''கூப்பிடுங்கள் அந்த உண்டிகொடுத்த நண்பரை!'' என்று மகிழ்ச்சியுடன் அழைத்தார். எம். ஜி. ஆர். அறையில் இருந்தவர்களையெல்லாம் அனுப்பிவிட்டு, அவரிடம் உட்கார்ந்து பேசி, உபசரித்து அனுப்பி வைத்தார். ''எப்போது எந்த உதவி வேண்டுமானாலும் கேளுங்கள். என்னாலானதைச் செய்வேன்!'' என்று இன்முகத்துடன் கூறி அனுப்பினார் எம். ஜி. ஆர்.

'காலத்தினாற் செய்த உதவி ஞாலத்திலும் மாணப் பெரிது' என்பதை அநுபவப் பூர்வமாக உணர்ந்து பழகிய நண்பர் எம். ஜி. ஆர். இந்த நன்றி உணர்வை, அவருடைய அரசியல் வாழ்க்கையில் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த தலைவர்கள் பலரும் அனுபவித்துப் பாராட்டி இருக்கிறார் கள். கர்நாடக முதல்வர் அர்ஸ், மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு, உத்திரப்பிரதேச முதல்வர் திவாரி போன்ற பலரும் அவரை இந்த முறையில் பாராட்டியது எனக்குத் தெரியும்.

●

உலகத்தில் ஒரு துறையில் சாதனை செய்தவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். அதிலேயே மிகச் சிறிய நிலையில் ஆரம்பித்து உச்சிக்கு வந்து சேர்ந்து விடுபவர் களைப் பற்றி அறிந்து வியந்திருக்கிறோம். ஆனால், இரண்டு துறைகளில் இப்படிச் சாதனை செய்தவர்களைப்

பார்ப்பது மிகவும் அரிது. அப்படி வந்திருந்தாலும், அதற்கு அவர்களுக்கு உதவியாக ஏற்கெனவே பின்னணிகள் நிறைய இருந்திருக்கும். இரண்டு துறைகளில் மிகவும் எளிய நிலையில் தொடங்கிப் புகழேணியின் உச்சியை அடைந்தவர்கள் மிக அபூர்வம். அப்படிப்பட்டவர் எம். ஜி. ஆர். அவர்கள்.

திரை உலகில் ஆரம்பகாலத்தில் அவர் அடைந்த சிரமங்களும், அனுபவித்த இன்னல்களும் சொல்லி முடியாதவை. படப்பிடிப்பில் கால் ஒடிந்து போனார். "இனி மேல் எங்கே?" என்று பொறாமைப்படுபவர்கள் சொல்லுவார்கள். அவர் மீண்டும் வருவார்! துப்பாக்கி குண்டு வெடிக்கும்; மருத்துவமனையில் படுத்திருப்பார்; 'ரொம்ப சீரியஸ்' என்று எல்லோரும் கவலைப்படுவார்கள். அதிலிருந்து மீண்டும் எழுந்து வந்துவிடுவார்!

அவர் நடித்த நூற்றுமுப்பத்தாறு படங்களில் — நூறு நாட்களுக்கு மேல் ஓடியவை சுமார் அறுபத்தைந்து ஆகும். பன்னிரண்டு படங்கள் வெள்ளிவிழா கொண்டாடின. நாற்பது படங்கள் வண்ணத்தில் வெளிவந்தன. தெலுங்கிலும், இந்தியிலும் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்த படங்கள் சுமார் எழுபது. மொத்தம் 205 படங்களில் அவர் தோன்றி இருக்கிறார். 1954-ம் ஆண்டு முதல் 1977 வரை மிக அதிக அளவு ஊதியம் பெற்ற தமிழ் நடிகர் அவர் தான். அவருடைய படங்களின் வெற்றியின் காரணமாக 'வசூல் சக்கரவர்த்தி' என்ற பட்டப்பெயர் அவருடைய ரசிகர்களால் கொடுக்கப்பட்டது.

எம் ஜி. ஆர். நடிக்கிறார் என்றால், அத்துறையை மட்டும் அவர் கவனித்துக் கொள்கிறார் என்று அர்த்தமில்லை. கதை அமைப்பைப் பார்த்து யோசனை சொல்லுவார். இசையைக் கூர்ந்து கவனித்துப் பாடல்களை எந்தெந்த இடங்களில் போடுவது உசிதம் என்று சொல்லுவார். எடிட்டிங், ஒளிப்பதிவு, வெளிப்புறக்காட்சி அமைப்பு, சண்டைக்காட்சிகள் எல்லாவற்றிலும் அவரு

டைய யோசனை இடம்பெறும். இப்படி அவர் ஒவ்வொரு படத்திலும் ஊறிப்போய் நடித்ததனால்தான் அவருடைய படங்கள் தொடர்ந்து அமோக வெற்றியை அடைந்தன!

அரசியல் உலகில், கட்சியை விட்டு விலக்கிவிடுவார்கள். 'ஆயிற்று! இனிமேல் அவருக்கு ஆதரவு இல்லை!' என்று எதிராளிகள் முடிவு கட்டிவிடுவார்கள். புதிய களத்தில் புதிய தளபதியாக உருவெடுப்பார்! ஆட்சியில் மிகவும் உறுதியான நிலையில் அரசாங்கத்தை நடத்திக் கொண்டிருக்கும் நிலையில் திடீரென்று அமைச்சரவை 'டிஸ்மிஸ்' ஆகி அவர் கீழே இறங்கிவிடுவார். 'இனிமேல் அவ்வளவு தான்!' என்று போட்டி அரசியல் கட்சிக்காரர்கள் சொல்லுவார்கள். மீண்டும் தேர்தலில் அமோக வெற்றி அடைந்து மீண்டும் ஆட்சிபீடத்துக்கு வந்து அமர்ந்து விடுவார் எம். ஜி. ஆர்.

காங்கிரஸ்காரராக இருந்த எம். ஜி. ஆர். அதை விட்டு விலகக் காரணமாக இருந்தது, சுபாஷ் சந்திரபோஸ் அந்த அமைப்பில் இருக்க முடியாமற்போனதுதான். 'அவருக்கு இடம்தராத காங்கிரஸில் எனக்கும் இடம் இல்லை!' என்று ஒதுங்கி விட்டார் எம். ஜி. ஆர். தனது கல்யாணத்தின்போது, தனது அன்னைக்கு அவர் விதித்த முக்கியமான நிபந்தனை ஒன்று உண்டு. 'கதர் ஆடை அணிந்து கொண்டுதான் திருமணம் செய்து கொள்வேன்' என்பதுதான் அது! அவ்வளவு ஆழ்ந்த காங்கிரஸ்வாதியை அந்த ஸ்தாபனம் காப்பாற்றி வைத்துக்கொள்ள முடியவில்லை.

அதன் இழப்பு திராவிட முன்னேற்றக் கழகத்தின் பெரும் லாபமாக ஆயிற்று. 1952-ம் ஆண்டில் அறிஞர் அண்ணாவின் அறிமுகம் எம். ஜி. ஆருக்குக் கிடைத்தது.

''எம். ஜி. ஆருக்கும் எனக்கும் உள்ள தொடர்பை நாடறியும். எம். ஜி. ஆரைப் பாராட்டுவது என்பது என்னை நானே பாராட்டிக் கொள்வதைப் போலத்தான்! உண்மைதானே? எம். ஜி. ஆர். என்றால், அவர் தாங்கி

யுள்ள கொள்கை எது என்பதை நாடறியும். முல்லைக்கு மணம் உண்டு என்பதைச் சொல்லவா வேண்டும்? இந்தக் கனி தங்கள் மடியில் விழாதா என்று பலரும் எதிர்பார்த்தனர். அது என் மடியில் வந்து விழுந்தது. அதை என் இதயத்தில் எடுத்து வைத்துக் கொண்டேன்'' என்று 'திராவிட நாடு' இதழில் எழுதினார் அறிஞர் அண்ணா.

அக்காலத்தில் திரை உலக நட்சத்திரங்கள் பலரையும் பயன்படுத்தி கழகத்துக்கு ஆதரவு திரட்டிக் கொண்டார் அண்ணா. கே. ஆர். ராமசாமி, கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் போன்ற பலரும் அவ்வாறு கழகத்தில் சேர்ந்து அண்ணாவின் படைக்குப் பலம் தந்தார்கள். 1957 முதல் 1971 வரை நான்கு தேர்தல்களிலும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் வெற்றிக்குப் பாடுபட்டு, பண உதவி தந்து, பிரச்சாரமும் செய்தார் எம். ஜி. ஆர்.

1958-ம் ஆண்டு 'நாடோடி மன்னன்' என்ற திரைப் படத்தைத் தயாரித்து, படத்தின் முகப்புக் காட்சியில், எம். ஜி. ஆர். பிக்சர்ஸின் சின்னமாக ஓர் ஆணும்-பெண்ணும் திராவிட முன்னேற்றக் கழகக் கொடியை ஏந்தி நிற்கும் வடிவத்தில் அறிமுகப்படுத்தி, கழகத்தின் முத்திரையைத் திரைப்பட ரசிகர்களின் மனத்தில் நிலைக்கச் செய்தார்.

அரசியலுக்கு எம். ஜி. ஆர். வருவதற்கு, எம். ஜி. ஆரின் திரைப்பட உலகின் உழைப்பு ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால், அந்த உழைப்பில் அவர் சாதித்து முடித்தவை நம்மை அதிசயிக்க வைப்பவை.

1966-ம் ஆண்டில் விருகம்பாக்கத்தில் நடைபெற்ற தி. மு. க. மாநாட்டில் அறிஞர் அண்ணா அவர்கள் எம். ஜி. ஆரைப் பற்றிக் கூறியபோது, ''நண்பர் எம். ஜி. ஆர். நடைபெற இருக்கும் பொதுத்தேர்தலின்போது, நாடெங்கும் ஒருமுறை சுற்றி, அவரது இனிய முகத்தை ஒருமுறை பொதுமக்களிடம் காட்டி வருவாரேயானால், அதன்மூலம் பல லட்சக்கணக்கான வாக்குகள் கழகத்

துக்குக் கிடைக்கும் என்ற உறுதிப்பாடு எனக்கு உண்டு!'' என்று சொன்னார்கள்.

மக்கள் அந்தப் பயணத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் எல்லோரும் கலங்கிப் போகும்படியான நிகழ்ச்சி 1967-ம் ஆண்டு ஜனவரி மாதம் பன்னிரண்டாம் தேதியன்று நடைபெற்றது. துப்பாக்கியால் சுடப்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார் எம். ஜி. ஆர். அவருடைய உடல்நிலை 'சீரியஸா'கவே இருந்தது. ஆனால், படிப்படியாக உடல் நிலையில் முன்னேற்றம் கண்டு, உடல்நலம் பெற்று வெளியே வந்தார் அவர்.

அன்று அவரால் தேர்தல் பிரச்சாரம் செய்ய முடியவில்லை. ஆனால், அவர் குண்டடிப்பட்டுக் கழுத்தில் கட்டுடன் படுத்திருந்த தோற்றத்தின் படமே, தமிழகச் சட்டமன்றத்தில் 53 இடங்களைப் பெற்றிருந்த தி. மு. க., 143 இடங்களைப் பெற்று பெரும் வெற்றியுடன் ஆட்சி அமைக்க உதவியாக இருந்துவிட்டது.

எம். ஜி. ஆர். பொது நிகழ்ச்சிகளில் பேசும்போது, தன்னுடன் பிறந்தவர்களைப் போலக் கருதும் மக்களை, 'இரத்தத்தின் இரத்தமே!' என்று குறிப்பிட்டுப் பேசுவதுண்டு. அதற்கு அவரே ஒருமுறை விளக்கம் கூறி இருக்கிறார்...

''நான் சுடப்பட்டு மருத்துவமனையில் இருந்தபோது, என் உடலிலிருந்து நிறைய இரத்தம் வெளியேறி இருந்தது. அப்போது என் உடலில் இரத்தம் செலுத்தி என்னை வாழ வைக்க ஆவன செய்தார்கள். இதைக் குறிப்பிடுவது எனது நீங்காக் கடமையாகும். அந்த இரத்தத்துளிகள் என் உடலில் இருப்பதால்தான் நான் மனிதனாக உலாவுகிறேன். அப்போது என் உடலில் செலுத்தப்பட்ட இரத்தம் யாருடையது என்பதுகூட எனக்குத் தெரியாது; அந்த இரத்தத்தை வழங்கியவர்களுக்கும் அது தெரியாது.

"அந்த இரத்தம் பலருடைய இரத்தமானதால், அனைவரையுமே நான் என் இரத்தத்தின் இரத்தமே என்று உரிமையுடன் — நன்றி உணர்வுடன் அழைக்கிறேன்!"

'இதய வீணை' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த போதுதான் எம். ஜி. ஆரை திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து நீக்கிய நிகழ்ச்சி நடந்தது. காங்கிரஸி லிருந்து 1969-ம் ஆண்டு இந்திரா காந்தி நீக்கப்பட்டபோது, முதன்முதலில் நாடு முழுவதும் எப்படி ஓர் எதிரொலி ஏற்பட்டதோ, அதே போல எம். ஜி. ஆர். நீக்கப்பட்டதும் தமிழ்நாடு முழுவதும் கலகலத்துப் போயிற்று.

சிறு பள்ளிக்கூட மாணவர்கள் முதல் கல்லூரி மாண வர்கள் வரையில் கிளர்ச்சியில் இறங்கினார்கள். சாலையில் செல்லும் கார்களையும், லாரிகளையும், பஸ்களையும் நிறுத்தி அதன்மீது எழுதத் தொடங்கினார்கள். கை வண்டி இழுப்பவர்களிலிருந்து, கடலை விற்பவர்கள் வரையில் எல்லோரும் ஆத்திரப்பட்டுக் கொண்டிருந் தார்கள்.

அவருடைய சாதனை நேரங்களிலும், சோதனை நேரங்களிலும் பல தடவைகள் நான் கூடவே இருந்திருக் கிறேன். இந்த நிகழ்ச்சியின்போதும் நான் கூடவே இருந்தேன். 'இதய வீணை' படப்பிடிப்பு நடந்து கொண் டிருந்தபோது, 'எக்ஸ்பிரஸ்' அலுவலகத்திலிருந்து டெலி போன் 'கால்' வந்தது. எம். ஜி. ஆர். தி. மு. க. விலிருந்து நீக்கப்பட்ட செய்திதான் அது. ஒருகணம் நான் அதிர்ந்து போய் உட்கார்ந்து விட்டேன். அவரோ அதைப்பற்றித் துளியும் கலங்கியதாகத் தெரியவில்லை.

தனக்குரிய வழக்கமான முறையில் வாய்விட்டுச் சிரித்தார். தனியான மகிழ்ச்சியுடன், "பாயசம் கொண்டு வரச் சொல்லுங்கள்!" என்றார். எல்லோருடனும் சேர்ந்து அதைப் பருகி விட்டு, பிறகு அமைதியுடன் படப் பிடிப்பைத் தொடங்கிவிட்டார். தமிழ் நாட்டின் அரசியலில் மிக

முக்கியமானதாக அமைந்த அந்த நிகழ்ச்சி அவரைத் தொட்டதாகவே தெரியவில்லை.

மூதறிஞர் ராஜாஜி அந்தச் செய்தியைப்பற்றிக் கேள்விப்பட்டதும், 'எம். ஜி. ஆரை தி. மு. க. விலிருந்து விலக்கியது, அண்ணாவையே கட்சியிலிருந்து விலக்கியதற்கு ஒப்பாகும்!' என்று கருத்துத் தெரிவித்தார்.

'அண்ணா திராவிட முன்னேற்றக் கழக'த்தை எம். ஜி. ஆர். துவக்கினார். தமிழ்நாட்டிலிருந்த ஆயிரக் கணக்கான ரசிகர் மன்றங்களும், தி. மு. க. வின் லட்சக் கணக்கான அடிமட்டத் தொண்டர்களும் அதில் இடம் பெற்றார்கள். திரைப்படத்துறையில் இருந்திருந்தாலும், அரசியல் ஈடுபாட்டில் அவருக்கு இருந்த பிடிப்பின் காரண மாக, அரசியல் நுட்பங்களை அவர் நன்கு கற்றறிந் திருந்தார்.

சோம்பல் என்பது துளியும் இல்லாமல், அவர் எந்தச் சூழ்நிலையிலும் யாரையும் சந்திப்பதற்குத் தயாராக இருந்தார். தனது மாபெரும் வெற்றியை எப்படிப்பட்ட சக்தியானாலும் எதிர்த்து அடையும் துணிச்சல் அவருக்கு இருந்தது. தேர்தல்களின்போது அதிகாலை முதல் நள்ளிரவு வரையில் அவர் செய்து வந்த சுற்றுப்பயணங்கள் அரசியல் வரலாற்றில் செதுக்கி வைக்கப்பட வேண்டியவைகளாகும். கூட்டங்களுக்கு தலைவர்கள் சற்றுத் தாமதமாக வந்தால் மக்கள் பொறுமை இழந்து விடுவது வழக்கம். ஆனால், எம். ஜி. ஆருக்காகக் கூட்டம் பலமணி நேரங்கள் — சில சமயம் ஒருநாள் முழுவதும் கூட — தாமதத்தைப் பொருட் படுத்தாமல் உட்கார்ந்து கொண்டு, பொறுமையுடன் காத்திருந்ததை நான் பார்த்திருக்கிறேன்.

1973-ம் ஆண்டு, திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதிக்கு, முக்கியமாக மூன்று கட்சிகள் போட்டி யிட்டன. பெருந்தலைவர் — கருணாநிதி ஆகியவர்களின் பலமான எதிர்ப்புக்கிடையே முதல் தடவையாகத் தேர்தல்

களத்தில் குதித்தது, எம். ஜி. ஆரின் தலைமையில் போட்டியிட்ட அ. தி. மு. க.

எம். ஜீ. ஆருக்கு மக்களிடம் இருந்த பேராதரவு, அப்போது வெளியாயிற்று. அ. தி. மு. க. பெற்ற கூடுதலான வாக்குகள், மற்ற இருகட்சிகளும் பெற்ற வாக்குகளின் மொத்தத்தைவிட அதிகமாக இருந்தது! முதன்முறையாக 'இரட்டை இலை'ச் சின்னம் தமிழ் நாட்டின் அரசியலில் ஒளிவீசிப் படர்ந்தது. தமிழகத்தில் மட்டுமின்றி கர்நாடகம், ஆந்திரம், கேரளம், புதுவை, டில்லி, மராட்டிய மாநிலங்களிலும் அண்ணா தி. மு. க. விற்குக் கிளைகள் தோன்றின. அது அனைத்திந்தியக் கட்சியாகவே உயர்ந்தது.

அவருடைய தேர்தல் பிரச்சாரத்தின் போது, ஒருமுறை நான் கண்ட காட்சி ஒன்றை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை. அது மழை இன்றி வறண்டு கிடந்த ஒரு பகுதி. நீரின்றிக் காய்ந்து விளைநிலம் வெடித்துக் கிடந்தது. எம். ஜி. ஆரின் காரை குறுக்கே நின்று தடுத்து நிறுத்தினார் ஒரு மூதாட்டி.

"அப்பா! உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளு கிறேன். ஒருமுறை இறங்கிவா. இந்த நிலத்தில் உன் பாதம்பட ஒரே ஒருமுறை நடந்து விட்டுத் திரும்பு. அது போதும்! இந்த நிலத்தில் பொன்விளையும். உன்னுடைய மனத்தைப் போல இந்த மண்ணும் குளிர்ந்து போகும்!" — கண்ணிலிருந்து நீர் கன்னங்களில் வழியக் கெஞ்சினாள் அந்தக் கிழவி.

எம். ஜி. ஆர். காரிலிருந்து இறங்கி அந்த மூதாட்டியை அணைத்துக் கொண்டு ஆறுதல் கூறினார். அவளையும் அழைத்துக் கொண்டு அந்த விளைநிலத்தில் நடந்துவிட்டுத் திரும்பினார். அந்த எளிய உள்ளத்தில் அன்று மலர்ந்த நம்பிக்கைதான் எத்தகையது? அங்கே மட்டும் அல்ல — தமிழ்நாடு முழுவதுமே லட்சோப லட்சம் மக்கள்,

அவருடைய ஆட்சியால் தங்கள் வாழ்க்கை மலர்ச்சி பெறும் என்று நம்பினார்கள்.

அதற்குரிய சூழ்நிலை 1977-ம் ஆண்டு உருவாயிற்று. இன்று அமைந்துள்ளது போலவே, அன்றும் இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து கூட்டணி அமைத்து, நாடாளுமன்றப் போட்டியில் இறங்கிற்று, அண்ணா தி. மு. க. அன்னை இந்திராவைச் சந்திக்கப்போன தலைவர் எம். ஜி. ஆருடன் நானும் போனதுண்டு. எம். ஜி. ஆரின் உயர்ந்த பண்புகளுக்கு மிகுந்த மதிப்புக் கொடுத்துப் பேசுவார் இந்திரா காந்தி. அன்று அவர் பாரதப் பிரதமராக இருந்தார். எம். ஜி. ஆர். இன்னும் கட்சித் தலைவராக மட்டுமே இருந்தார். ஆயினும், அவரிடம் மிகுந்த மரியாதையுடன் நடந்து கொண்டார் இந்திரா. உரையாடி முடிந்தபின் வாசலில் வந்து காரில் ஏறியபோது, கூடவே வாசல்வரை வந்து வழியனுப்பி வைத்தார்.

மதுரையில் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் ஒன்றில் அன்னை இந்திராவும், தலைவர் எம். ஜி. ஆரும் ஒரே மேடையில் பேசுவதாக ஏற்பாடாகி இருந்தது. அந்த அபூர்வக் காட்சியைக் காண லட்சக்கணக்கான மக்கள் கூடி இருந்தார்கள். மேடைக்கு வந்து பேசும்போது, யார் முதலில் மேடை ஏறி மக்களின் மகிழ்ச்சி மிகுந்த ஆரவார வரவேற்பைப் பெறுவது என்பது ஒரு கேள்வியாகவே இருந்தது.

இந்திரா காந்தி ஒருபுறமும், எம். ஜி. ஆர் மற்றொரு புறமுமாக, ஏககாலத்தில் மேடையில் இருபுறமிருந்தும் ஏறிவந்து மக்களை வணங்கிப் பாராட்டைப் பெற்றுக் கொண்டார்கள்! சுமார் மூன்று நிமிடங்களுக்குக் கரவொலி அடங்கவே இல்லை. இதற்குப் பெருந்தன்மையுடன் மனமுவந்து ஒப்புக் கொண்டார் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி. அந்தப் பெருமதிப்புக்கு உரியவராக அன்றே திகழ்ந்தார் எம். ஜி. ஆர்.

இந்தக் கூட்டணி அமோக வெற்றியை அடைந்தது. பாண்டிச்சேரி உட்பட நாற்பது இடங்களில் முப்பத்தாறு இடங்களைப் பிடித்தது!

தொடர்ந்து தமிழகச் சட்டமன்றத் தேர்தல் வந்தது. ஜனநாயகத்துக்கு ஒரு தலைநாயகராக எம். ஜி. ஆர். தனது கட்சிக்குப் பிரமிக்கத்தக்க வெற்றியைத் தேடிக் கொடுத்தார். அதுவரையில் அவரைத் திரையில் மட்டும் நீதிக்காகப் போராடும்—எளிய மக்களுக்காகப் பாடுபடும்—கருணை உள்ளத்துடன் காக்கும் நாயகனாகப் பார்த்த லட்சோபலட்சம் மக்கள், அவரை முதல்வராக்கித் தமிழ் நாட்டின் நாலரைக் கோடி மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபடும் தலைவராக்கி மகிழ்ந்தார்கள்.

முதல்வராகப் பதவி ஏற்ற எம். ஜி. ஆர். மக்களுக்குத் தந்த வாக்குறுதி இது:

" 'மக்கள் குரலே மகேசன் குரல்' என்ற அண்ணாவின் தத்துவப்படி, மக்களின் பிரதிநிதிகளாகிய நாங்கள் அரசாங்கத்தை நடத்துவோம்.

"இலஞ்ச லாவண்யம் இல்லாத, ஊழலற்ற — நீதித் துறையின் நிர்வாகத்தில் தலையிடாத அரசை நடத்துகிற மாபெரும் பணியைச் செவ்வனே செய்ய உயிரைக் கொடுத்தாகிலும் பாடுபடுவோம்.

எங்களுடைய வாழ்வு வசதிகள் அத்தனையையும் இழக்க வேண்டிய நிலை வந்தாலும், அதற்காக எதிர்ப்படுகின்ற அத்தனை தடைகளையும் எதிர்த்து எங்கள் கடமைகளை நிறைவேற்றுவோம். இதனை அமரர் அண்ணாவின்மீது ஆணையிட்டு, அமைச்சரவையின் சார்பில் தெரிவித்துக் கொள்கிறேன்." (30-6-'77)

எம். ஜி. ஆர். என்ற தலைநாயகர் இவ்வாறு ஆட்சிக்குத் தலைவராக உயர்ந்ததைப் பொறுத்துக் கொள்ள முடியாதவர்கள், அவரால் ஆட்சி நடத்த இயலாது என்று கூறினார்கள். அதற்குத் தேவையான திறமையும்,

பின்னணியும் அவரிடம் இல்லை என்று பிரச்சாரம் செய்தார்கள். அந்தக் கூற்றுக்களைப் பொய்யாக்கினார் எம். ஜி. ஆர். மனிதாபிமான உணர்வோடும், ஏழை எளிய மக்களிடம் கருணையோடும், தமிழ்நாட்டின் கலைச்சிறப்பு ஓங்கி ஒளிரும் வகையில் ஆட்சியை நடத்தினார். எத்தனையோ போராட்டங்களையும், இயற்கையின் சீற்றங்களையும் அவர் சமாளிக்க வேண்டி இருந்தது. மத்திய அரசு ஜனதா கட்சியினால் அமைக்கப்பட்ட நிலையிலும், தொடர்ந்து இந்திரா காந்தியைப் பாராட்டி அவரை ஆதரித்தார் என்பதற்காக, மத்திய அரசு அவர்பால் கொஞ்சம் மனத்தாங்கலும் கொண்டிருந்தது. இருந்தும், தமிழக அரசு சீரிய அணுகுமுறையின்மூலம் பிரச்சினைகளுக்குச் சுமுகமான தீர்வுகண்டு, தன் சக்திக்கு மீறிய சலுகைகளை வழங்கி, ஒரு புதிய வரலாற்றைப் படைத்தது.

'உலகம் சுற்றும் வாலிபனா'க வெளி நாடுகளில் உள்ள கலைநுட்பங்களை ஆராய்ந்தவர், 'உலகம் சுற்றும் முதல்வராக' அமெரிக்கப் பயணத்தை மேற்கொண்டார். பொதுவாக 'நான் கண்ட உலகம்' என்று தனது பயண அனுபவங்களை எழுதுவார்கள். முதல்வரோ, 'நான் காணும் உலகம்' என்றே தனது கருத்துக்களை எழுதினார்...

'இன்னும் பலர் பல வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டும், அவர்களது சிறப்பு அறிவிற்கு ஏற்ப நூல்களின் வாயிலாகத் தெரிந்து கொண்டதை, அநுபவ வாயிலாகவும் அறிவது, நமது தமிழகத்திற்கும் — அதன் எதிர்காலத் திற்கும் பயன் தருவதாகவும் அமையும்.

'நான் இப்போது எழுதுவதையும், அவர்கள் நேரில் அறியும்போது தெரிந்துகொள்வதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது — அவர்கள் முடிவு ஒரு வேளை எனது

கருத்துக்கு மாறாக அமைந்து விட்டாலும்கூட, தமிழகத்துக்கு 'நல்ல பயனை விளைவிக்கும்' என நம்புகிறேன்.

'இந்த எண்ணத்தில் எழுந்ததுதான், 'நான் காணும் உலகம்' என்ற தலைப்பாகும்...' ('இதயம் பேசுகிறது' கட்டுரை.)

அந்தப் பயணத்தில் தமிழக முதல்வர், தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சிக்காகக் காகித ஆலைத் திட்டங்களைப் பார்வையிட்டார். தமிழ்நாட்டு மக்களின் பாதுகாப்புக்குரிய காவல்துறையை நவீனப்படுத்தும் முறைகளை அமெரிக்காவில் கவனித்தார். வெளிநாடுகளில் மருத்துவத் துறையில் ஏற்பட்டுள்ள அதிசயிக்கத்தக்க முன்னேற்றங்களைக் கண்கூடாகப் பார்த்து, அங்கே பணிபுரிந்து கொண்டிருந்த இந்திய—தமிழக டாக்டர்களிடம், தாய் நாட்டுக்கு வந்து சேவை செய்யும்படி அழைப்பு விடுத்தார். வெளிநாடுகளில் உள்ள தமிழர்கள் இயக்கி வரும் சங்கங்களின் கூட்டங்களில் கலந்து கொண்டு, தமிழகத்தின் கலாச்சாரப் பெருமையை எடுத்துச் சொன்னார். வெளி நாடுகளில் உள்ள தூதரகங்களின் நிகழ்ச்சிகளில் பங்கு பெற்று, இந்தியாவின் ஜனநாயகப் பாரம்பரியத்தை எடுத்துக் கூறினார்.

முதல்வரும், நானும், அரசு அதிகாரிகளும் போலீஸ் துறை வேலை செய்யும் நுட்பங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ள, அமெரிக்காவில் வாஷிங்டன் காவல் தலைமையகத்துக்குப் போனோம்.

காவலுக்காகச் சுற்றி வருவது, குற்றங்களை ஆய்ந்து கண்டுபிடிப்பது, போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவது, கலகங்களைச் சமாளிப்பது, இளம்பருவக் குற்றவாளிகளைப் பிடிப்பது போன்ற பலவகைப் பணிகளையும் செய்கிறது இந்த அலுவலகம். இங்கே போலீஸ் துறைத் தலைமை அதிகாரி ஜெஃபர்ஸனுடன் உரையாடினார் முதல்வர். ஒவ்வொரு பிரிவையும் விரிவாகச் சுற்றிப் பார்த்தார்.

ஆயுதப் பாதுகாப்பு, குற்றங்களின் புலனாய்வு, குற்றவாளி களைப் பற்றித் தகவல் சேகரிப்பது ஆகிய ஒவ்வொன்றையும் பற்றித் தலைமை அதிகாரிகளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

குழந்தைகளை இளமைப் பருவத்திலேயே நல்வழிப் படுத்தி வளர்த்தால், அவர்கள் எதிர்காலத்தில் பொறுப்புள்ள நல்ல மக்களாக உருவாக முடியும் என்பது அவருடைய கொள்கை. இதை அவர் தனது வாழ்க்கைக் குறிப்பில் ('நான் ஏன் பிறந்தேன்?') பல இடங்களில் வலியுறுத்தி எழுதி இருக்கிறார். வாஷிங்டனில் போலீஸ் துறையில் இளம்பருவக் குற்றவாளிகளுக்கென ஒரு தனிப் பிரிவு இருக்கிறது. 'சிறுபிராயத்திலேயே சீர்ப்படுத்துவது சுலபமாக இருக்கும். வளர விட்டுவிட்டால் முற்றிப் போகும். அப்புறம் வளையாது!' என்று கூறிச் சிரித்தார் தலைமை அதிகாரி ஜெஃபர்ஸன். எத்தகைய கருத்து ஒற்றுமை! அந்தப் பிரிவின் செயற்பாடுகளை மிகுந்த ஆர்வத்துடன் கவனித்தார் முதல்வர்.

குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் கம்ப்யூட்டர் இயந்திர அமைப்பை எங்களுக்கு விளக்கினார் அந்த அதிகாரி. வாஷிங்டனில் உள்ள குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பது அதனால் எளிதாக இருக்கிறது. அங்கே பணி புரியும் அதிகாரிகள், பணியாளர்கள் ஆகியோரில் நூற்றுக்கு முப்பது பங்கு கறுப்பு நிறத்தவர்கள்தாம். அதைப் பற்றிக் கேட்டு மிக மகிழ்ந்து போனார் முதல்வர். தமிழ்நாட்டில் தாழ்த்தப்பட்ட மக்கள், எளிய மக்கள் ஆகியோருக்கு முன்னேற எல்லா வாய்ப்புகளும் அளிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டிருந்த அவருக்கு, அந்த அமைப்பு மிகவும் பிடித்திருந்தது.

தலைநாயகரான முதல்வர் லண்டனில் — இந்தியக் கலாச்சாரம், நுண்கலைகள், அவற்றுக்குப் பின்னணியாகப் பக்தி பூர்வமான உணர்வு ஆகியவற்றுக்குத் தொண்டு

செய்யும் 'பாரதீய வித்யா பவன'த்தின் கிளை அலுவலகத்துக்குப் போயிருந்தார். அப்போது மவுண்ட்பேட்டன் பிரபு அதன் தலைவராக இருந்தார். ஹரோல்ட் வில்ஸன் கட்டடத்தைத் திறந்து வைத்தார். பிரிட்டிஷ் பிரதமராக இருந்த ஒருவர், இந்தியாவின் பெருமையை உணர்த்தும் கட்டடத்தைத் திறந்து வைத்தது, இந்திய மக்களிடம் காட்டும் மரியாதையைக் காட்டுவது போல இருந்தது.

அந்த நிலையத்துக்கு எம். ஜி. ஆர். அழைக்கப்பட்டிருந்தார். அங்கே உள்ள சர்வமத பூஜை அறைக்குள் செல்லும்போது, அவர் கால் செருப்பைக் கழற்றி வெளியே வைத்துவிட்டுப் போனார். பக்தி பூர்வமான உணர்வுக்கு மதிப்புக் கொடுக்கும் நயமிகுந்த பண்பாடு எம். ஜி. ஆருக்கு எப்போதும் உண்டு. அதை அன்று அங்கே கண்டேன். இதற்கு முன் ஒரு தடவை இதேபோல ஓர் அனுபவத்தை நான் உணர்ந்து மனம் நெகிழ்ந்திருக்கிறேன்...

அப்போது 'உலகம் சுற்றும் வாலிபன்' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. புத்தர் கோயிலுக்குள் சண்டைக் காட்சி ஒன்றைப் படம் பிடிக்க வேண்டியிருந்தது. ஒளிப்பதிவாளர், ஒலிப்பதிவாளர் எல்லோரும் மளமள வென்று உள்ளே போய்விட்டார்கள். எம். ஜி. ஆர் மட்டும் கால் செருப்பைக் கழற்றி வைத்துவிட்டுத்தான் உள்ளே போனார்.

அந்த 'ஷாட்' எடுக்கப்படும்போது நான் கூட இருந்தேன். கோயிலுக்குள்ளே வில்லன் அவரை அடித்த போது அவர் அதை எதிர்க்கவே இல்லை. சண்டை மெதுவாகக் கோயிலுக்கு வெளியே வந்ததும், எம். ஜி. ஆர். வில்லனை 'அடிஅடி'யென்று அடித்து நொறுக்கி விட்டார்!

"கோயிலுக்குள்ளேயும் நீங்கள் ஓரளவு பதிலடி கொடுத்திருக்கலாமே?" என்று நான் அவரிடம் கேட்டேன்.

"அகிம்சாமூர்த்தியான புத்த பகவானின் கோயில் இது. அதற்குள் இருந்து கொண்டு, நடிப்பேயானாலும்

ஒருவரை அடித்துத் துன்புறுத்த எனது மனம் இடம் கொடுக்கவில்லை!'' என்றார் எம். ஜி. ஆர். எப்பேர்ப்பட்ட மனப் பக்குவம்!

இதுபோன்ற நயமிகுந்த, பண்பு செறிந்த உணர்வுகள் தாம், இன்று பலரும் புகழும் ஓர் உன்னதத் தலைவராக அவரை உருவாக்கி இருக்கின்றன...

எம். ஜி. ஆர். மிகுந்த பக்தி உணர்வு கொண்டவர். நல்ல காரியங்களைச் செய்யவும், நல்ல பண்புகளை வளர்க்கவும் பயன்படும் பக்தியில் பற்று உள்ளவர். வாழ்க்கையில் தனக்கு வழிகாட்டிய தாயையே முதல் தெய்வமாக எண்ணி வழிபடுபவர். எனினும் கொல்லூர் மூகாம்பிகையைத் தனது தாயைப் போலவே எண்ணி வணங்குபவர். அது உள்ளத்திலிருந்து கனிந்து எழுந்து வரும் அன்பு. தனது குழந்தையிடம் அன்பையும், பரிவையும் காட்டும் தாயைப் போல, தனது பக்தர்களிடம் அருள் மழையைப் பொழியும் தாய் மூகாம்பிகையிடம் அவருக்கு உள்ள பற்று இயல்பானது. மூடநம்பிக்கை வேறு; முழு மனத்துடன் உணர்ச்சிப் பூர்வமாக அமையும் நல்லெண்ணம் கனியும் பக்தி வேறு. அந்த பக்திதான் அவரிடம் இருக்கிறது. அதுவே அவர் செய்யும் நல்ல காரியங்களுக்கு அடித்தளமாகவும் அமைகிறது.

முதன் முதலில் அவரை காஞ்சிப் பெரியவர்களிடம் அழைத்துச் சென்றது நான்தான். இது என்னுடைய மிக நெருங்கிய நண்பர்களுக்குக்கூடத் தெரியாத ஒன்று. சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த அந்த நிகழ்ச்சி என்னுடைய நினைவில் இன்றும் பசுமையாக இருக்கிறது.

அன்று அவருடைய பிறந்தநாள். அதிகாலை இரண்டு மணி அளவிலேயே இருவரும் புறப்பட்டு விட்டோம். காஞ்சி முனிவரிடம் அளித்து ஆசிபெறுவதற்காகப் பழங்களையும் எடுத்து வந்திருந்தார் எம். ஜி. ஆர். காஞ்சிப் பெரியவர்கள் அப்போது கலவையில் தங்கி இருந்தார்கள்.

பரமாச்சாரிய சுவாமிகளின் குருவின் அதிஷ்டானம் அங்கே இருந்தது. அங்கே தங்கி வழிபாட்டில் ஒன்றி இருந்தார்கள் காஞ்சிப் பெரியவர்கள். நாங்கள் அங்கே போய்ச் சேர்ந்த போது, காலை சுமார் மூன்றரைமணி. ஆனால், இருள் பிரியாத அந்த நேரத்திலேயே பெரியவர்கள் அங்கே இல்லை!

நான் திகைத்துப் போனேன். 'பெரியவர்கள் அந்த வேளையில் எங்கே போயிருப்பார்கள்? எம். ஜி. ஆரை வேறு அழைத்துக் கொண்டு வந்துவிட்டோமே? இப்போது என்ன செய்வது?' இப்படிப் பல்வேறு எண்ணங்கள் என்னைக் குழம்பச் செய்தன. "எங்கே போயிருப்பார்?" என்று அங்கே உள்ள பலரிடமும் விசாரித்தேன். யாராலும் குறிப்பாகச் சொல்ல முடியவில்லை.

"பெரியவர்கள் ஸ்நானம் செய்ய ஆற்றங்கரைக்குப் போயிருக்கிறார்கள். வாருங்கள்! அழைத்துக் கொண்டு போகிறேன்" என்று வழிகாட்ட முன் வந்தார் அந்த ஆசிரமத்தைச் சேர்ந்த ஓர் அன்பர். அந்த இருள் பிரியாத நேரத்திலேயே சுவாமிகள் நீராடப் போய்விட்டதை அறிய ஆச்சரியமாக இருந்தது. நண்பர் காட்டிய பாதையில் சென்றபோது, அந்த ஆச்சரியம் இன்னும் அதிகமாக ஆயிற்று. குறுகலான சந்துகள், கரடு முரடான கப்பிப் பாதை இவற்றின் வழியாக ஆற்றங்கரைக்கு அழைத்துப் போனார் அந்த அன்பர். தோப்புகளின் வழியே ஒற்றை யடிப் பாதையாகக் குறுகி, மளமளவென்று சரிந்து, பள்ளத்தின் அடியில் ஆறு குறுகலாக ஓடிக் கொண்டிருக்கும் இடத்துக்குச் சென்று முடிந்தது அந்தப் பாதை. இருட்டைப் பொருட்படுத்தாமல், அந்தச் சிக்கலான வழியிலா அந்த நேரத்தில் நீராட வந்திருக்கப் போகிறார் பெரியவர்கள்? இருவரும் வியப்புடன் நின்றுவிட்டோம்...

அங்கே அமைதி தவழும் ஆற்றங்கரையில், வைகறை வேளையில், வெள்ளிக்கீற்று தோன்றா இருட்புலத்தில்,

எழில்கொஞ்ச சலசலத்து ஓடும் ஆற்றின் அருகே அமர்ந் திருந்தார் காஞ்சி முனிவர். திருநீறு இட்ட நெற்றியும், தங்கமெனக் கனிந்த முகமும், பூரணப் பொலிவு நிறைந்த வடிவமுமாக, அருட்சுடர் அங்கே ஒளிவீசிக் கொண் டிருந்தது.

தனது கையில் கொண்டு வந்திருந்த பழத்தட்டை அவர்களுக்கு முன் வைத்து விட்டு கீழே விழுந்து வணங் கினார் எம். ஜி. ஆர். அவர் வந்திருப்பதை நான் மெதுவான குரலில் சொன்னதும், "வந்துவிட்டாரா?" என்று கேட்டார் முனிவர். அந்தக் கேள்வியிலும் பார்வையிலும் எத்தனையோ அர்த்தங்கள் தெரிந்தன! எம். ஜி. ஆர். வணங்கி எழுந்ததும், ஒரு தாயின் கனிவுடன் பரிவுநிறைந்த பார்வையுடன் ஆசி கூறினார்கள் பெரிய வர்கள். ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டபோது பக்திப்பூர்வமான உணர்வு செறிந்து நிற்க, மெய்ம்மறந்து நின்றார் எம். ஜி. ஆர்.

"உட்காருங்கள்!" என்றார் காஞ்சி முனிவர். நான் சற்று தயங்கினேன். பிறகு மெல்ல, "அவர் தங்களைத் தரிசித்து அந்தரங்கமாகப் பேச வந்திருக்கிறார். தனிமை யில் பேசுவது அவருக்குச் சௌகரியமாக இருக்கும்" என்று கூறினேன். சுற்றி இருந்த சீடர்களை விலகும்படி பார்வை யினாலேயே பணித்தார் சுவாமிகள். நானும் விலகிக் கொண்டேன். சுமார் முக்கால் மணிநேரம் இருவரும் மனம்விட்டுப் பேசினார்கள். அவர்கள் என்ன பேசினார்கள் என்பது அவர்களுக்கு மட்டுமே தெரியும்.

விடிந்து விட்டது!

காலைக் கதிர்ஒளியின் தூய்மையில் குளித்த வடிவ மாக, நெருப்புச்சுடராக ஒளிவீசி நின்றார் காஞ்சிப் பெரியவர். அவர்களுடைய தாள் பணிந்து இருவரும் விடை பெற்றுக் கிளம்பினோம். அதற்குள் ஆற்றங்கரையில் கூட்டம் கூடிவிட்டது. பெரியவர்கள் அவர்களுக்கே

உரிய புன்னகையுடன் எம். ஜி. ஆரைப் பார்த்தார்கள். "கவனித்தாயா? அவ்வளவு கூட்டமும் உனக்காக வந்தது தான்! மக்களைக் கவரக்கூடிய அவ்வளவு பெரிய சக்தி உன்னிடம் இருக்கிறது. புரிகிறதா உனக்கு?" என்று கேட்டார் காஞ்சி முனிவர். எம். ஜி. ஆரின் முகம் அந்த அருட்பார்வையின் நிழல்பட்டுச் சிவந்து போயிற்று.

அந்த நேரத்தையும் — அந்தக் கேள்வியையும் இப்போது நினைத்துப் பார்த்துக் கொண்டாலும் என்னுடைய நெஞ்சம் நெகிழ்ந்து நிற்கிறது. என் வாழ்க்கையில் நான் செய்த காரியங்களுள், மிகவும் உன்னதமான ஒன்றாக அதை நான் அப்போது கருதினேன்.

எம் ஜி. ஆருக்காக மீண்டும் காஞ்சிப் பரமாச்சாரிய சுவாமிகளைத் தரிசித்து வேண்டிக் கொள்ளும் இன்னொரு சந்தர்ப்பமும் எனக்கு வாய்த்தது.

"உலகத் தமிழ் மாநாட்டை எம். ஜி. ஆர். நல்ல முறையில் நடத்தவேண்டும். அதனால் தமிழ்நாடும்— பாரத நாடுமே பெரும் நன்மைகளை அடையும்" என்று காஞ்சிப் பெரியவர்கள் கூறி இருந்தார்கள். ஆனால் எம். ஜி. ஆரின் அமைச்சரவை 1980-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் விலக்கப்பட்டபோது இது கைகூடாமற் போய் விடுமோ என்ற பயம் ஏற்பட்டது. அப்போது காஞ்சிப் பெரியவர்களின் அருளாசியை வேண்டி நான் சென்ற போது, "கவலை வேண்டாம். மீண்டும் வந்து நல்ல முறையில் ஆட்சி நடத்தும் சந்தர்ப்பம் அவருக்குக் கிடைக்கும். அப்போது எப்படியேனும் இந்த மாநாட்டை நல்லமுறையில் நடத்திவிடச் சொல்" என்று கூறினார்கள் பெரியவர்கள்.

அந்த அருள்வாக்கு பலித்தது! எம். ஜி. ஆர். அமோக மான வெற்றியை அடைந்து, மீண்டும் தமிழக முதல்வரானார். 1981-ம் ஆண்டு தொடக்கத்திலேயே மதுரையில் தமிழ் உள்ளங்கள் எல்லாம் பொங்கிப் பூரிக்கச்

செய்யும் வகையில், சரித்திரச் சிறப்பு வாய்க்கும்படியான முறையில், உலகத் தமிழ் மாநாட்டை நடத்த எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டார் தமிழக முதல்வர். அந்த மாநாட்டில் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி கலந்து கொள்ளவேண்டும் என்ற ஆவல் எம். ஜி. ஆருக்கு இருந்தது. அதை ஏற்பாடு செய்வதில் ஒரு சிறு சிக்கல் இருந்தது. அது இந்திரா காந்தியும், எம். ஜி. ஆரும் மனவேறுபாடு காரணமாகச் சற்று விலகி இருந்த சமயம். இந்திரா காந்தி வரமாட்டார் என்றே எல்லோரும் சொல்லி விட்டார்கள்.

எப்படியாவது இந்த நல்ல காரியத்துக்கு ஏற்பாடு செய்யும்படியும், அதுகுறித்து காஞ்சிப் பெரியவர்களின் அருளாசியை வேண்டிப் பெறுமாறும் என்னை அனுப்பி வைத்தார் தமிழக முதல்வர். சதாராவுக்குச் சென்று அந்த அருட்பெருங்கடலைச் சந்தித்தேன். தமிழக முதல்வர் சார்பில் நான் எடுத்துக் கூறிய வேண்டுகோளை உணர்ந்து கொண்டு மௌனமாகவே இருந்து, ‘நல்லதே நடக்கும்’ என்று குறிப்பால் உணர்த்தி அனுப்பினார் காஞ்சிப் பெரியவர்கள்.

அந்த ஆசியைச் சுமந்து கொண்டு, நான் பாரதப் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்திக்கச் சென்றேன். ‘உலகத் தமிழ் மாநாடு உலக நன்மைக்காக நடத்தப் படுகிறது. அதனால் நாட்டுக்கே நன்மைகள் விளையும் என்று காஞ்சிப் பரமாச்சாரிய சுவாமிகள் சொல்லி அருளி இருக்கிறார்கள்; அதில் தாங்கள் எவ்விதமேனும் கலந்து கொள்வது நாட்டுக்கும், தங்களுக்கும் நன்மை தரும்’ என்று பணிவுடன் கூறினேன். ‘அப்படியா? இந்த விவரங் களை முதலிலேயே எனக்கு ஏன் எடுத்துச் சொல்ல வில்லை?’ என்று கேட்டு விட்டு, மாநாட்டின் கடைசி நாள் விழாவில் கலந்து கொள்ள ஒப்புக் கொண்டார் பாரதப் பிரதமர். அந்த வருகையினால் விழாவும் தனிப் பொலிவு பெற்றது.

உலகத் தமிழ் மாநாட்டின் தொடக்கத்திலேயே, இத் தமிழ் விழா கருணைப் பெருங்கடலாம் காஞ்சி முனிவரின் ஆசிகளையும் ஆலோசனைகளையும் பெற்றிருந்ததை தமிழக முதல்வர் குறிப்பிட்டார். விழா முடிந்ததும் காஞ்சிப் பெரியவர்களை மீண்டும் தரிசித்து நன்றி கூறும் கடமையையும் நான் ஏற்றுக் கொண்டேன்.

வெளிநாட்டுப் பயணத்திலிருந்து திரும்பிய முதல்வர் செயற்படுத்தியத் திட்டங்களில் முக்கியமானது கிராமங்களில் அடிப்படை வசதிகளை அமைக்கும் தன்னிறைவுத் திட்டம். தமிழ்நாட்டில் கிராமங்களில் ஒன்றியங்களின் மூலம் ஒருசில பணிகள் நடந்து கொண்டுதான் இருந்தன. ஆனால், பல கிராமங்களில் அடிப்படை வாழ்க்கை வசதிகளான சாலைகள், குடிதண்ணீர் வசதி போன்றவைகூட இல்லை. சுதந்திரம் அடைந்தபிறகு பல ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டபோதிலும், அவற்றின் கவனம் பெரும்பாலும் நகர்ப்புற வளர்ச்சியிலும், பெரிய தொழில்களின் பெருக்கத்தை ஊக்குவிப்பதிலுமே இருந்தது. கிராமங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும், கிராமக் கைத்தொழில்களை ஊக்குவிப்பதிலும், கிராம மக்களின் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதிலும் தேவையான அளவுக்கு நிதி ஒதுக்கீடு செய்யப் படவில்லை.

இதைத் தனது முக்கியக் குறிக்கோளாக எடுத்துக் கொண்டு, கிராமங்களில் உள்ள மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதைத் தனது முக்கிய நோக்கமாக வைத்து செயற்படுத்தினார் எம். ஜி. ஆர். அதுவரை போக்குவரத்து வசதி இல்லாத கிராமங்கள் பலவற்றுக்கும் பஸ் வண்டிகள் ஓட ஆரம்பித்தன. கிராமங்களுக்கும் மருத்துவ வசதி, கல்வி வசதி, பெண்கள் நல்வாழ்வு வசதி போன்றவற்றை அமைத்துக் கொடுத்தார் அவர். 'தமிழ் நாட்டில் கிராமப் பகுதிகளில் உள்ள மக்கள், தேர்தலில் அ. இ. அ. தி. மு. க. ஆட்சி வெற்றி பெறுவதையே விரும்புகிறார்கள்' என்று மக்கள் சொல்லும் அளவுக்கு, அவர்

களிடையே ஆதரவைத் தேடிக் கொண்டார் தமிழக முதல்வர்.

இவ்வளவு நிர்வாகப் பொறுப்புக்களுக்கு நடுவில் அவருடைய கலை உள்ளமும் அன்று இருந்தது போலவே புதுமலர்ச்சியுடன் மணம் வீசிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு துறையிலும் உள்ள கலைச்செல்வர்களுக்கும், கலைத் தொண்டு செய்யும் பெண்மணிகளுக்கும் பலவித மான பட்டங்கள், நிதியளிப்பு, ஆஸ்தான வித்துவான் பதவி — இப்படி வழங்கினார் எம். ஜி. ஆர்.

தமிழிசைச் சங்கத்தின் முப்பத்தைந்தாவது ஆண்டு விழாவில் அவர் பேசியதும், அறிவித்த திட்டங்களும் அவருடைய இசை ஆர்வத்தையும், தமிழ்ப் பற்றையும் காட்டின...

தமிழில் இயற்றப்படும் தலைசிறந்த கவனத்துக்கு ஐயாயிரம் ரூபாய் நன்கொடை.

நாதஸ்வரம் பயில வரும் இளந்தளிர்களுக்கு ஐந்நூறு ரூபாய் மாத மானியம்.

அறநிலையங்களில் தேவாரம் — திருப்புகழ் பாடும் ஓதுவார்களுக்கு ஐயாயிரம் ரூபாய் வருட மானியம்.

புதிய ராகங்களைச் சிருஷ்டிப்பவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் நன்கொடை... இப்படி 'மளமள'வென்று அறிவித் தார் அவர்!

கர்நாடக இசையில் எம். ஜி. ஆருக்கு உள்ள ஆர்வம் அவருடைய நண்பர்கள் பலருக்கும் தெரியும். அவருடைய இல்லத்தில் அமைதியான வேளைகளில் அந்த இசை கேட்கும். மதுரை சோமுவின் பாட்டை, மகாராஜபுரம் சந்தானத்தின் குரலை அனுபவிப்பார். உமையாள்புரம் சிவராமனின் மிருதங்க வாசிப்பை, லால்குடி ஜெயராமனின் வயலின் இசை நயத்தை அனுபவித்துக் கேட்பார். அண்மையில் அவர் அப்போலோ மருத்துவமனையில்

சிகிச்சை பெற்றபோது, மன அமைதிக்காகக் கர்நாடக இசையை வைக்கச் சொல்லிக் கேட்டார் என்ற செய்தியைப் படித்தபோது, நான் மனம் நெகிழ்ந்து போனேன்.

கர்நாடக சங்கீதத்தில் எம். ஜி. ஆருக்குத் தனியான பிரியம் உண்டு. அவருடைய வீட்டில் அமைதியான வேளைகளில் அந்த இசை கேட்கும். நல்ல கர்நாடக இசை என்றால் ஆர்வத்தோடு அவர் அங்கே போய் உட்கார்ந்திருப்பார். ஒருமுறை அவர் எழுத்தாளர் 'எல்லார்வி'யின் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தார். மேடையில் லால்குடியின் வயலின் இசைக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது.

எம். ஜி. ஆர். பந்தலில் நுழைந்ததும் பந்தலில் ஏற்பட்ட சலசலப்பில் கச்சேரி நின்றுவிட்டது. அமைதியாக ஒரு புறம் அமர்ந்து கச்சேரியைக் கேட்க வந்த அவருக்கும் இது பெரிய ஏமாற்றம். சில நிமிடங்களில் அவர் எழுந்து போய்விட்டார். கொஞ்சநேரம் கழித்து மேடையில் வயலின் இசையில் ஆழ்ந்திருந்தவருக்கு ஒரு கடிதஉறை வந்து சேர்ந்தது. உள்ளே ஒரு கடிதம் இருந்தது. "உங்களுடைய நயமான இசையை ஒரு ரசிகனாக இருந்து கேட்க வந்தேன். ஆனால் எனது வருகையினால் ஏற்பட்ட சலசலப்பில் உங்கள் கச்சேரியே பாதிக்கப்பட்டு விட்டது. இப்படிக் குறுக்கிட நேர்ந்ததற்கு வருந்துகிறேன்!" என்று எழுதி அனுப்பி இருந்தார் எம். ஜி. ஆர்.

தமிழ் இசைக்கு வித்திட்ட திரு. பாபநாசம் சிவனை அறியாதவர்கள் இல்லை. கர்நாடக இசைக்கு அவர் செய்துள்ள தொண்டு மகத்தானது. அவருக்கு ஒரு பாராட்டு விழா நடத்த மயிலாப்பூர் சிருங்கேரி மடத்தில் ஏற்பாடாகி இருந்தது. செம்மங்குடி சீனுவாச ஐயர் இந்த விழாவுக்குத் தலைமை வகித்தார். பிரபல சங்கீத வித்துவான்கள் பலரும் சபையில் அமர்ந்திருந்தனர்.

எம். ஜி. ஆரும் அங்கே வந்திருந்தார். அந்த வித்துவான்களில் பலர் அவரை அங்கே எதிர்பார்க்கவே இல்லை.

அவர்களுக்கு அது வியப்பாகவே இருந்தது. விழாவில் கலந்து கொண்ட எம். ஜி. ஆர். எழுந்து மேடையேறி பாபநாசம் சிவனின் கையில் பத்தாயிரம் ரூபாயைத் தனது அன்புக் காணிக்கையாகக் கொடுத்தார். அந்த மேடையிலேயே தமிழுக்கு அரிய தொண்டு செய்த அந்தப் பெரியவரை நெடுஞ்சாண்கிடையாக விழுந்து பாதங்களைத் தொட்டு வணங்கினார். சபையோர் மெய்சிலிர்த்துப் போனார்கள். அவருடைய தன்னடக்கத்தையும், பெருந்தன்மையையும், கலைரசனையையும் கண்டு வியந்தார்கள்.

எம். ஜி. ஆர். பேசத் தொடங்கினார். அதுவும், ''பிரம்மஸ்ரீ செம்மங்குடி சீனுவாச ஐயர் அவர்களே!'' என்று அழைத்துப் பேசத் தொடங்கினார். எம். ஜி. ஆரை ஒரு புகழ்பெற்ற திரைப்பட நடிகராக மட்டுமே அறிந்திருந்த அந்த சபையினர், முக்கியமாக அங்கே கூடியிருந்த வித்துவான்கள் அசந்து போய் உட்கார்ந்து விட்டார்கள்.

''உங்களில் பலர் சினிமா சங்கீதம் என்றால் அலட்சியமாக நினைக்கக் கூடும். அது கர்நாடக சங்கீதத்திலிருந்து மாறுபட்டதாகவும், தரங்குன்றிய ஒன்றாகவும் கூட நினைக்கலாம். உங்கள் நினைவைக் கொஞ்சம் சரி செய்து கொண்டு பாருங்கள். எம். கே. தியாகராஜபாகவதர் பாடிய, 'வள்ளலைப் பாடும் வாயால்',எம்.எஸ். சுப்புலட்சுமி பாடிய, 'எங்கும் நிறை நாதப் பிரும்மம்' போன்ற பாடல்கள் உங்கள் நினைவுக்கு வருகிறதல்லவா? அந்தப் பாடல்களின் இனிமை இன்னும் உங்கள் காதுகளில் ரீங்காரம் செய்கிறது அல்லவா? அந்தக் காலத்துப் படங்களில் பி. யு. சின்னப்பா, கே. பி. சுந்தராம்பாள், டி. ஆர். மகாலிங்கம் போன்றவர்கள் தங்களுடைய கணீரென்ற குரலில் பாடிய, அற்புதமான பாடல்களின் மூலமாகத்தான் தாங்கள் நடித்த படங்களுக்கு மிகப் பெரிய வெற்றியைத் தேடித் தந்தார்கள்.

அந்தக் காலத்தில் இப்படிக் கர்நாடக இசையை மென்மையாகவும் மேன்மையுடனும் திரைப்படங்களில்

ஒலிக்கச் செய்தவர் — இன்று மேடையில் உங்களால் பாராட்டப்படும் பாபநாசம் சிவன் அவர்கள்தாம். அவர் அந்தப் பணியிலிருந்து விலகியபிறகு, உங்களைப் போன்ற வித்துவான்களும் பின்னால் போய்விட்டார்கள். கர்நாடக இசையைத் திரைப்படங்களில் கையாளுவதும் வெகுவாகக் குறைந்து போயிற்று. கர்நாடக இசை அப்படித் தனது உன்னதமான இடத்தை இழக்கக் காரணமாக இருந்தவர் யார்? உங்களைப் போன்ற மதிப்புக்குரிய வித்துவான்கள்தாம்! இதை நான் ஒரு எடுத்துக் காட்டாகவே சொல்வேன்.

சரி! போனது போகட்டும். நீங்கள் எல்லோரும் மறுபடியும் வாருங்கள். திரைப்படங்கள் என்பது லட்சக் கணக்கான ரசிகர்கள் பங்குபெறும் — மக்களோடு கலந்து நிற்கும் மிகப் பெரிய சாதனம். அதை உங்களுடைய கலையின் நயத்தால் செழுமை பெறும்படி செய்ய முன்வாருங்கள். அதற்குரிய தொண்டுகள் செய்ய முற்படுங்கள்!''

எம். ஜி. ஆர். இவ்வாறு பேசி முடித்ததும், அந்த உள்ளங்கனிந்த அழைப்பைக் கேட்டு, பெரிய வித்து வான்கள் அவ்வளவு பேரும் மனம் நெகிழ்ந்து போனார்கள். இளம் வித்துவான்கள் உடல் புல்லரிக்க மகிழ்ந்து நின்றார்கள். அவர் பேசி முடித்ததும் எழுந்த கைதட்டல் அடங்குவதற்கு வெகுநேரமாயிற்று.

அன்று எம். ஜி. ஆர். ஒரு புகழ்பெற்ற நடிகராகவும், அரசியல் கட்சித் தலைவராகவும் மட்டுமே இருந்தார். அப்புறம் அவர் தமிழக முதல்வராகப் பதவி ஏற்றபிறகு, கர்நாடக இசையின் வளர்ச்சிக்காக அறிவித்த மானியங்கள், வித்துவான்களுக்குக் கொடுத்த உதவிப் பணம், ஆஸ்தான வித்துவான்களாக அறிவித்துக் கௌரவித்த இசைக்கலைஞர்கள் எத்தனை எத்தனை? அவருடைய ரசனையும் பாராட்டும் உதட்டளவில் நின்றுவிடுவதல்ல

என்பதை, அவர் தாம் எவ்வளவு அழகாகத் தான் ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது எடுத்துக் காட்டிவிட்டார்?

தமிழர் திருநாளான பொங்கல்விழா அவருடைய இல்லத்தில் உள்ளத்தில் பொங்கும் பொங்கலாகவே அமையும். ஆயிரக்கணக்கில் வந்து கூடும் அன்பர்கள் எல்லோரையும் ஒருவர் விடாமல் பார்த்து விடுவார் எம். ஜி. ஆர். அவருடைய பார்வைக்காகவும் அவருடைய கரங்களைத் தொட்டு மகிழவும், அவரிடம் ஆசி பெறவும் காத்து நிற்பவர்கள் எத்தனை எத்தனை...?

எல்லோருக்கும் பொங்கல் கிடைக்கும். எல்லோரையும் முகம்மலர அயர்வின்றிக் கவனித்து உபசரிப்பார் முதல்வர்.

''விவசாயிகள் கதிர் அறுவடை செய்து கதிரவனுக்குக் காணிக்கை செலுத்துவதைப்போல, நாங்கள் எங்கள் வாழ்வுக்கு வழிகாட்டி, வளம் சேர்க்கும் கதிரவனாம் மக்கள் திலகத்துக்கு, எங்கள் இதய அன்பைக் காணிக்கையாகச் செலுத்துகிறோம்...'' என்று தொழிலாளத் தோழர்கள் பேசுவார்கள்.

அப்போது, ''நானும் உங்களைப்போல ஒரு தொழிலாளிதான்... உங்களில் ஒருவன் நான். எனக்கு நீங்கள்— உங்களுக்கு நான்! நமது குறிக்கோள் நாம் வாழ்வது மட்டும் அல்ல... நாட்டு மக்கள் நலம் பெறவேண்டும்; அதற்கு நமது உழைப்பை அளிக்க வேண்டும். உழைப்புக்குரிய பலன் எல்லோருக்கும் கிடைக்கும். குறைவற்ற வாழ்வு குன்றாத உழைப்பில்தான் இருக்கிறது!'' என்பார் முதல்வர்.

தொழிலாளிகளின் கூட்டமானாலும் என். ஜி. ஓ.க்கள் மாநாடானாலும், அலுவலர்களின் கருத்தரங்கானாலும், இதே கருத்தை அவர் திரும்பத் திரும்பச் சொல்லுவதை நான் கேட்டிருக்கிறேன். 'உழைப்பே செல்வம் — செய்யும் தொழிலே தெய்வம்' — என்பது அவருடைய கருத்து.

அதற்கு முதன்மை கொடுத்துச் செயற்பட்ட முதல்வர் அவர்.

தமிழ் மக்களுக்காக ஒரு முக்கியமான மாநாட்டை, அறிஞர் அண்ணா வழியில் நடத்த முயற்சிகளை மேற்கொண்டார் அவர். அதுதான் மூன்றாவது உலகத் தமிழ் மாநாடு. அதற்கு எல்லா ஏற்பாடுகளும் முடிவடையும் நிலையில், மத்திய அரசு சட்டமன்றத்தைக் கலைத்து விட்டது.

பதவியை நாடிச் செல்பவர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன். அபூர்வமாக சிலரைப் பதவி நாடி வருவதும் உண்டு. அப்படிப்பட்ட ஓர் அரிய தலைவர் எம். ஜி. ஆர்.! ஆனால், பதவியில் இருந்தாலும், இல்லா விட்டாலும், இரண்டு நிலைகளையுமே மிக அமைதியாக ஏற்றுக் கொள்ளும் மிக உயர்ந்த பண்பு அவரிடம் இருந்தது.

1980-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் பதினேழாம் தேதி, ஞாயிற்றுக்கிழமையன்று இரவு நேரம். எம். ஜி. ஆருடன் அமர்ந்து நான் டெலிவிஷனில் 'சிவகவி' படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்தப் பொய்யாமொழிப் புலவரின் கதையைக் காட்டிய திரைச்சித்திரத்தில் தியாகராஜ பாகவதரின் இனிய இசையையும், கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனின் நகைச்சுவையையும் மிகவும் ரசித்துப் பேசிக் கொண்டிருந்தார் எம். ஜி. ஆர்.

டெலிபோன் குறுக்கிட்டது. டில்லியிலிருந்து செய்தி வந்தது. பாரதப் பிரதமர் தமிழ்நாடு உட்பட ஒன்பது மாநில சட்டசபைகளைக் கலைத்து விட்டார்! செய்தியைக் கேட்டபிறகு, மிக நிதானமாகவே எம். ஜி. ஆர். அந்தச் செய்தியை என்னிடம் கூறினார். அவருடைய அமைதி, கட்டுப்பாடு எதுவுமே கொஞ்சம்கூடக் குலையவில்லை. நான் பேச முடியாமல் உட்கார்ந்திருந்தேன். அவரோ சற்றும் அதிர்ச்சியடையவில்லை. ''எதிர்பார்த்தவை

தானே...?'' என்று கூறிவிட்டு, மீண்டும் திரைப்படத்தை டெலிவிஷனில் பார்க்க ஆரம்பித்து விட்டார்.

சில நிமிடங்கள் கூட ஆகி இராது. மீண்டும் போன்கால் வந்தது. இந்தத் தடவை நாஞ்சில் மனோகரன் பேசினார்: ''பிரதமர் ஒன்பது மாநில சட்டமன்றங்களைக் கலைத்து விட்டார். அதில் தமிழ்நாடும் இருக்கிறது என்று ஜி. கே. ரெட்டி போன் செய்து கூறினார்,'' என்றார் மனோகரன். ''அப்படியா...? இருக்கட்டும்!'' என்று பதட்டமின்றிக் கூறிவிட்டு, போனை வைத்துவிட்டார் எம். ஜி. ஆர். அடுத்தபடியாக, இதை உறுதிப்படுத்துவதைப் போல போலீஸ் துறையின் தலைமை அதிகாரியிடமிருந்து தகவல் வந்தது.

எம். ஜி. ஆர். மணியை அடித்து ஆர்டர்லியை வரவழைத்தார். போலீஸ் காவலர், ஆர்டர்லி, செக்யூரிட்டி ஆபீசர் ஆகிய எல்லோரையுமே வரச்சொல்லி அனுப்பினார். அவர்கள் வந்ததும் நன்றிகூறி அனுப்பிவிட்டார். ''கூடாரத்துடன் எல்லோரும் கிளம்பி விடுங்கள். யாருமே இருக்க வேண்டாம்!'' என்று கூறியபோது, அவருடைய குரலில் துளி கலக்கம்கூட இல்லை. ''காலையில் போகலாம் ஐயா! அதுவரையில் நாங்கள் இங்கே எங்களுடைய பணியைத் தொடரலாம். அது வழக்கம்தான்...'' என்று அவர்கள் சொல்லிப் பார்த்தார்கள். அவர் ஒப்புக் கொள்ளவில்லை. அந்தக் கண்டிப்பிலும் ஒரு நயமான பெருந்தன்மையைப் பார்த்தேன் நான்.

பி. டி. ஐ. நிருபரிடமிருந்து 'போன் கால்' வந்தது. எம். ஜி. ஆரின் கருத்து என்ன என்பதை கேட்டார் அவர். ''மகிழ்ச்சிதான். வேறு என்ன?'' என்று சொல்லி விட்டார் அவர். பிற பத்திரிகைகளிலிருந்து நிருபர்கள் போனில் பேசினார்கள். அதே பதில்தான் — அதே அமைதிதான். புன்னகை மாறாமல் பதில் சொல்லிக் கொண்டிருந்தார் எம். ஜி. ஆர்.

எனக்கு மனங்கலங்கி இருந்தது; கண்களும் கலங்கின. மனத்தில் வேதனைப் பேரலைகள் புரண்டன. ஆனால், எம். ஜி. ஆர். புன்னகையுடன் படம் பார்த்துக் கொண்டிருந்தார். பதவியில் இருந்தபோது, அவரிடம் கண்ட அதே அமைதியான நிலையை 'அவரிடம் பதவியை உதறிய பிறகும் நான் காண முடிந்தது.

ஆனால், இந்தக் குறுக்கீட்டினால் எம். ஜி. ஆரின் மதிப்பு மேலும் உயர்ந்தது. மக்களின் பேராதரவுடன் மீண்டும் ஆட்சியில் பொறுப்பேற்றார் அவர். முதற் காரியமாக உலகத் தமிழ் மாநாட்டை, காஞ்சிப் பெரியவரின் அருளாசியுடனும் — ஆத்திக மக்கள் அனைவருடைய நல்லாசியுடனும் உலகமே வியக்கும் வகையில் நடத்தி முடித்தார் முதல்வர்.

இந்த முறை அரசுப் பொறுப்பை ஏற்றதும், எளிய மக்களுக்காக இன்னொரு மேலான திட்டத்தை வகுத்தார் எம். ஜி. ஆர்...

பள்ளி மாணவனாகக் கும்பகோணத்தில் வாழ்ந்த அந்த நாட்களில், பசியோடு பள்ளிக்குச் சென்று பாடம் படிக்க முடியாமல் அவதிப்பட்டதை அவர் மறக்கவில்லை... வீட்டில் பட்டினி இல்லாமல் இருக்க இளம் வயதிலேயே தொழிலுக்குப் போக வேண்டி நேர்ந்த துயரம் மிகுந்த அநுபவத்தையும் மறக்கவில்லை. 'குழந்தைகளுக்குப் படிக்க வசதி செய்து கொடுத்தால் போதாது; பட்டினியால் வாடாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று எண்ணினார் முதல்வர். அதுவே குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களில் மதிய உணவு அளிக்கும் திட்டமாக உருவெடுத்தது. சுமார் 67 லட்சம் குழந்தைகள் இதனால் வீட்டில் அவர்கள் சாப்பிட்டே இருக்க முடியாத சத்துணவைப் பெற முடிந்தது.

வீட்டில் ஏழைக் குழந்தைகளுக்கு அரிசிச் சோறு கிடைப்பதே சிரமமாக இருக்கும்போது, பருப்பும் காய்

கறிகளும் எப்படிக் கிடைக்க முடியும்? ஆனால், உடல் வளர்ச்சிக்கும் — மூளை வளர்ச்சிக்கும் இவை மிகவும் அவசியம். இவற்றை அவர்களுக்குக் கொடுத்த முதல்வர், அவர்களுடைய பசியை மட்டும் போக்கவில்லை; எதிர் காலத்துக்கு ஆரோக்கியமுள்ள, அறிவுத் திறன் கொண்ட தமிழ்ச் சமுதாயத்தையே கொடுத்து விட்டார்! — இந்தப் பாராட்டு நான் கூறுவதில்லை. ஐக்கியநாடுகள் சங்கத்தின் குழந்தைகள் நலப்பிரிவு அளித்த பாராட்டு இது!

முதல்வரின் இந்த அரிய திட்டத்தை ஆந்திர மாநில அரசு பின்பற்றிச் செயல்படுத்தியது. இன்று குஜராத் மாநில அரசு செய்யத் திட்டமிட்டிருக்கிறது. அன்னை இந்திராவின் பாராட்டைப் பெற்ற இந்தத் திட்டம், இன்று குழந்தைகள் பதினைந்து வயதுவரை இதன் பலனை அடையும் அளவுக்கு, அபாரமான வளர்ச்சியைப் பெற்றிருக் கிறது.

மிக அளவான நிதி வசதியே கொண்ட தமிழக அரசாங்கம் இந்தப் பெரிய பொறுப்பை எப்படி ஏற்க முடியும்? இதனாலேயே மதுவிலக்கின் பிடியைத் தளர்த்தி அதனால் கிடைக்கும் வரியின் வருமானத்தைப் பெற வேண்டியதாயிற்று. இதனால் கள்ளச் சாராயத்தின் மூலம் நேரும் அநியாயச் சாவுகளைத் தடுக்கவும் முடிந்தது. குடி வெறி கொண்ட மனிதன் கையில் பணம் இல்லாவிட்டால் குடிக்காமல் இருந்து விடலாம்; ஏழைக் குழந்தைகளுக்கு வயிறு பசித்தால் சாப்பிடாமல் இருக்க முடியுமா?

வருமான வசதியைப் பெருக்கி, தமிழ் நாட்டில் மீண்டும் மதுவிலக்கைக் கொண்டு வந்துவிடும் நன்னாள் அதிக தூரத்தில் இல்லை என்பது அவருடைய நம்பிக்கை. அது கைகூடும் என்று நம்பிக்கை கொடுப்போம்!

தமிழக முதல்வராக இருந்தாலும், தேசிய அளவில் — பிற மாநில முதல்வர்களின் பெருமதிப்புக்குரியவராக இருந்தவர் எம். ஜி. ஆர். அவருடன் பாரதியாரின் சிலைத்

திறப்பு விழாவுக்காக நான் மேற்கு வங்க மாநிலத்துக்குச் செல்ல நேர்ந்தது. அப்போது முதல்வர் ஜோதிபாசு அவரை மிகுந்த மதிப்புடன் வரவேற்றதை நான் கண்டேன். அது பெரியகுளம் தேர்தல் வெற்றிக்குப் பிறகு நடந்த சந்திப்பு. "எவ்வளவு பெரிய வெற்றி? எத்தனை மகத்தான வெற்றி. அகில இந்தியக் கட்சிகள் யாவும் தோற்றுப் போயின! எனக்கும் தோல்விதான்!" என்று நகைச்சுவையுடன் கூறி அவரைப் பாராட்டினார் ஜோதிபாசு.

ஆந்திர முதல்வர் என். டி. ஆர். மிகுந்த மரியாதையுடன் அவரை அணுகுவதுண்டு. "என்னுடைய அண்ணன்" என்று சுவாதீனமாகவே எம். ஜி. ஆரைப்பற்றிக் குறிப்பிடுவார். திரை உலகத்திலிருந்து அரசியலுக்கு வந்த அவர், பல விஷயங்களில் எம். ஜி. ஆரைத் தன்னுடைய முன்னோடியாகக் கொண்டிருந்தார். சென்னை நகருக்காகத் தண்ணீர் வழங்கும், 'தெலுங்கு — கங்கை' திட்டத்தை அவரிடம் கொண்ட பெருமதிப்பின் காரணமாகவே ஒப்புக் கொண்டார் என். டி. ஆர்.

தேவராஜ் அர்ஸ் இருந்தபோதும் சரி, ராமகிருஷ்ண ஹெக்டே வந்தபோதும் சரி, இடையில் குண்டுராவ் இருந்த போதும் சரி — கர்நாடக முதல்வர்கள் அவரிடம் மிகுந்த மரியாதையுடன் நடந்துகொண்டார்கள். அவருக்காகவே, இக்கட்டான பல சமயங்களில் காவிரி நீரை விட்டுக் கொடுத்து கைகொடுத்தார்கள். மகாராஷ்டிர முதல்வர் வசந்தராவ் படீல் கர்நாடக முதல்வருடன் எல்லைப் பிரச்சினை பற்றிப் பேச தமிழ்நாட்டின் தலைநகரைத்தான் தேர்ந்தெடுத்துக் கொண்டு வந்தார்.

தமிழகத்தில் இருந்ததைப் போலவே, கல்கத்தாவிலும், டில்லியிலும், பம்பாயிலும் அவருக்கு இருந்த செல்வாக்கையும், மக்களின் பேரன்பு மிகுந்த வரவேற்பையும் நான் நேரில் கண்டிருக்கிறேன். முதல்வராக இருக்கும்போதும், தலைவராக மட்டுமே இருந்தபோதும்கூட அதுபோன்ற

அகில மதிப்பை அவர்களிடம் பெற்றிருந்ததை நான் கண் கூடாகப் பார்த்திருக்கிறேன்.

ஒருமுறை பம்பாய்க்கு 'பிலிம்பேர்' விழாவுக்குப் போன போது, அத்தகைய நிகழ்ச்சி ஒன்று நடந்தது...

பம்பாய் ஷண்முகானந்தா ஹாலில் இரவு ஒன்பதரை மணிக்கு 'பிலிம்பேர்' பத்திரிகையின் பரிசளிப்பு விழா நடக்கத் தொடங்கிற்று. அதில் கலந்து கொள்ள பிரபல நடிகர்களும், நடிகைகளும், டைரக்டர்களும் வருகி றார்கள்... கோட்டும் சூட்டுமாக இருப்பவர்களுக்கு நடுவில், வேஷ்டியும் சட்டையுமாகத் தனித்து நிற்கிறார் எம். ஜி. ஆர். ஆனால் அவரைக் காண, அவரிடம் பேசத் தான் எல்லோருக்கும் ஆசை. பிரபல நடிக — நடிகையர்கள் அருகில் வந்து வணக்கம் தெரிவிக்கிறார்கள்.

'மிஸ்டர் எம். ஜி. ஆர்.! நான் உங்கள் ரசிகன் (I am your Fan)' என்று அருகில் வந்து கும்பிடுகிறார் பிரபல நடிகர் — தயாரிப்பாளர் ராஜ்கபூர்.

மேடையில் பரிசளிப்பு விழா நடைபெறுகிறது. ஒவ்வொரு நடிகரும், நடிகையும் இன்னொரு நடிகர் அல்லது நடிகையிடமிருந்து பரிசுகளைப் பெற்றுக் கொள்ளு கிறார்கள். நிகழ்ச்சிகளை வர்ணிக்கும் நடிகர் டேவிட், எம். ஜி. ஆரை அறிமுகப்படுத்துகிறார். "எம். ஜி. ஆர். நடிகர் மாத்திரம் அல்ல; அரசியல் பிரமுகர்; அள்ளிக் கொடுக்கும் கொடை வள்ளல்..."

மத்திய அமைச்சர் குஜ்ரால் தானே எழுந்து வந்து அவருக்குப் பரிசை வழங்குகிறார். 'ஓய்வு பெற்ற நடிகர் களுக்கான துயர்துடைப்பு நிதி'க்குப் பதினைந்தாயிரம் ரூபாய் நன்கொடையை அங்கேயே அளிக்கிறார் எம். ஜி. ஆர். கூடி இருந்த பெருங்கூட்டத்தின் கரவொலி யில் சபை அதிர்கிறது.

அங்கே நான்கு இளம் நடிகர்களைப் பார்க்கிறார் எம். ஜி. ஆர். அவ்வளவு நடிக — நடிகையர் கூடி இருந்த

இடத்தில் அந்த இளைஞர்கள் நடத்திய கலை நிகழ்ச்சி அவரைக் கவருகிறது. அவர்களை எப்படியேனும் சென்னைக்கு அழைத்துவந்து கௌரவிக்க வேண்டும் என்று முடிவு செய்கிறார்.

அறிவும் திறமையும் எங்கே இருந்தாலும் கற்பூரம் பற்றிக் கொள்வதைப் போல, அதைப் பிடித்துக் கொள்வது எம். ஜி. ஆரின் பெருந்தன்மை மிகுந்த சாமர்த்தியம். அவர்களைப் பாராட்டிக் கௌரவிப்பதில் தனிமகிழ்ச்சி அடைவார். அந்த நான்கு இளைஞர்களையும் சென்னைக்கு அவர் விருப்பப்படி அழைத்துவரும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டேன்.

சென்னை சத்யா ஸ்டூடியோவில் திரை உலகப் பிரமுகர்கள் முன்னிலையில், அந்த நால்வரையும் வைத்து ஒரு கலைநிகழ்ச்சி நடத்தினோம். திரை உலகத்தில் நடக்கும் வேடிக்கைகளையும், தயாரிப்பாளர்களைக் காக்கா பிடிப்பதையும் கிண்டல் செய்து பல நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அதைப் பார்த்து ரசித்தனர் எம். ஜி. ஆர்., என். டி. ஆர். உட்படப் பல்வேறு நடிக — நடிகையர்கள்.

"நான் இவர்களை வரவழைத்துப் பாராட்டுவிழா நடத்தியதற்கு முக்கியக் காரணங்கள் இரண்டு உண்டு. முதலாவது மாநிலம், மொழி என்ற எல்லைகளைக் கடந்து, கலையில் வல்லவர்கள் எங்கே இருந்தாலும் அவர்களை அழைத்துப் பாராட்டி பாரதநாட்டின் ஒருமைப்பாடு செழிக்க வேண்டும் என்று வற்புறுத்துவது. இரண்டாவது, தமிழகத்தில் இவர்கள் பாராட்டுப் பெறுவதைப் பார்த்து வடநாட்டில் உள்ள பெருமக்கள் இதேபோல் நமது கலை வல்லுநர்களை அழைத்துப் பார்த்துப் பாராட்டி — தமிழ் நாட்டின் கலைக்கொடி வடக்கே பறக்க உதவத் தூண்ட வேண்டும் என்பது!"

எத்தகைய பெருந்தன்மையான பேச்சு! அன்று அவர் சார்ந்திருந்த திராவிட முன்னேற்றக் கழகம் வடநாட்டின

ரையும், இந்தி மொழியையும் ஓரளவு எதிர்த்தே நின்ற காலம் அது. அப்போதும் இவர் இப்படி ஒரு பரந்த மனப் பான்மையை மனம்திறந்து வெளியிட்டதை எப்படிப் பாராட்டுவது?

அஸ்ராணி, பெயிண்டல், சுபாஷ்கைய், சுரேஷ்சத்வால் என்ற அந்த நான்கு இளைஞர்களும் சென்னையில் தங்கி எம். ஜி. ஆரின் விருந்தோம்பலை நன்கு அனுபவித்துவிட்டு பம்பாய்க்குப் புறப்பட்டார்கள். விமான நிலையத்தில் அவர்களை வழி அனுப்பி வைக்க என்னை அனுப்பி இருந்தார் எம். ஜி. ஆர். அவர்கள் 'செக் - இன்' செய்து கொள்ளக் கிளம்பும் நேரத்தில் அங்கே திடீரென்று வந்து சேர்ந்தார் எம். ஜி. ஆர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு தங்க செயின் அணிவித்து, முதுகில் தட்டிக்கொடுத்துப் பாராட்டினார்.

அந்த நால்வரும் மனம் நெகிழ்ந்து கண்ணீர் விட்டார்கள். "எவ்வளவு பெருந்தன்மை மிகுந்தவர்! வடக்கே பெரிய நடிகர் என்றால் எங்களைப் போன்ற இளம் நடிகர்களைப் பார்க்கக்கூட ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இங்கே தமிழ்நாட்டின் தலைசிறந்த நடிகராகவும் அரசியல் தலைவராகவும் விளங்கும் எம். ஜி. ஆர். எங்களை எப்படிப் பெருமைப்படுத்தி அனுப்பி வைக்கிறார். எங்களால் நம்பவே முடிய வில்லையே?" என்று சொல்லிச் சொல்லி மகிழ்ந்து போனார்கள்.

இன்று சுபாஷ்கைய் இந்திப் பட உலகில் பிரபல டைரக்டராகக் கொடி கட்டிப் பறக்கிறார். அஸ்ராணி நகைச்சுவை நடிகர்களிடையே முதலாவதாக நிற்கிறார். வருங்காலத்தில் இப்படி அவர்கள் முன்னணிக்கு வரப் போவதை பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பே அறிந்து பாராட்டிய எம். ஜி. ஆரின் தீர்க்கதரிசனம் என்னை வியக்க வைக்கிறது!

தாய்மொழியாம் தமிழில் அளவற்ற பற்றுக் கொண்டதைப் போலவே தாயிடம் அளவுகடந்த பக்தி கொண்டவர் எம். ஜி. ஆர். 'தாய்' என்ற சொல்லைக் கேட்டாலே புல்லரிப்பவர் எம். ஜி. ஆர். சில சமயங்களில் நான் அவரிடமே, "உங்கள் புகழும் வெற்றியும் கண்படு கின்ற அளவுக்கு இருக்கிறது. ஜாக்கிரதையாக இருங்கள்" என்று சொல்லுவதுண்டு. அவர் உணர்ச்சி மிகுந்த குரலில், "எனக்கு ஒரு தீங்கும் நேரிடாது. என்னுடைய தாய் என்னைக் காப்பாற்றுவாள்!" என்று பதில் சொல்லுவார்.

அவருடைய இல்லம் அமைந்துள்ள ராமாவரம் தோட்டத்தில் அவர் தனது தாயாருக்காக ஒரு கோயிலே கட்டி வைத்திருக்கிறார். வெளியே புறப்படும்போது வலதுபுறம் திரும்பி, கார் ஒரு கண நேரம் நிற்கும். தாயின் திரு உருவத்தை வணங்கிவிட்ட பிறகுதான் அவர் மேலே செல்லுவார். எந்தக் காரியத்தையும் 'தாயே துணை!' என்று சொல்லித்தான் செய்வார்.

தாயைத் தெய்வமாகவும், தாய்க்குப் பிறகுதான் தாரம் என்றும், தாயை எப்பாடுபட்டாகிலும் காக்க வேண்டும் என்றும், மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்லி அவர் நடித்த படங்கள் தாம் எத்தனை? தாயிடம் கொண்ட பற்றை, தெய்வமாகக் கொண்டு வழிபடும் பக்தியை, அழகாகப் படங்களில் கொண்டு வந்தது மட்டு மல்லாமல், தமிழ்நாடெங்கும் மாதரை, வயது முதிர்ந்த மூதாட்டியரை, தாயாகவே எண்ணி — தாய்க்குலத்தை வணங்கி, வாழ்ந்தவர் எம். ஜி. ஆர்.

தமிழ்நாட்டில் உள்ள எண்ணற்ற தாய்மார்கள் அவரை, "எங்கள் வீட்டுப் பிள்ளை!" என்று பாராட்டி, அவரைப் பார்த்து மெய்சிலிர்த்து வணங்கிவிட்டுப் போகும் பாங்கை, தமிழ்மக்கள் பல இடங்களில், பொதுக்கூட்டங் களில் பார்த்திருக்கிறார்கள். ராமாவரம் தோட்டத்துக்கு வந்து அவரைச் சந்தித்து, அவர் காலில் விழுந்து தாய்மார்கள் வணங்கும் காட்சியை எல்லோருமே

பார்க்கலாம். எம். ஜி. ஆர். பதறிப்போய் அவர்களைக் கைதூக்கி விடுவார். வயது முதிர்ந்தவர்கள் அவரை அருமை மகனைப் போல அணைத்துக் கொண்டு கண்ணீர் விடுவார்கள்.

அப்படி வணங்கிய ஒரு தாயிடம் நான் தனியே, "அவர் உங்களைவிட வயதில் சின்னவராயிற்றே... அவரை நீங்கள் வணங்கலாமா?" என்று கேட்டபோது, அந்த மூதாட்டி, "அது வயசைக் கடந்த பிள்ளைங்க! சிறியவங்க, பெரியவங்க என்று பார்க்க முடியாத தெய்வமுங்க அது!" என்று பதில் சொன்னார். கண்களில் நீர் பனிக்க அவர் சொன்ன அந்தப் பதில், என்னை மெய்சிலிர்க்க வைத்தது.

ஒருமுறை பாண்டிச்சேரியில் தேர்தல் பிரசாரம் நடந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு தொகுதிக்கும் அவர் வந்து கிராமம் கிராமமாகப் போகவேண்டும் என்று அவருடைய கட்சி வேட்பாளர்கள் விரும்பினார்கள். ஒரு குறிப்பிட்ட கிராமத்துக்கு அவர் வந்து சேர்ந்தபோது, கண்ணைக் கூசுகிற வெயிலின் சூடு தகித்த வண்ணம் இருந்தது. சென்னையிலிருந்து தொடர்ந்து பிரயாணம் செய்து கொண்டு வந்திருந்த எம். ஜி. ஆரின் முகம் களைப்பினால் வாடி இருந்தது.

கிராமத்துக்குள் செல்லும் சாலையின் முகப்பில் கார் வந்து நின்றதும் எம். ஜி. ஆர். இறங்கினார். அவரை எதிர் கொண்டழைக்க, அந்தக் கிராமமே திரண்டுவந்து நின்று கொண்டிருந்தது. வயதுமுதிர்ந்த தாய்மார்கள் கையெடுத்துக் கும்பிட்டுப் பேசினார்கள். 'என் ராசா! வெயிலிலே இறங்கி நடக்காதே! உன் முகம் வாடி இருக்குது. எங்க கிராமத்து ஓட்டுக்கள் அம்புட்டும் உனக்குத்தான். நீ பேசாம திரும்பிப் போ ராசா!' என்று கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்கள். அந்தக் கள்ள மில்லாத அன்பைக் கண்டு அவருடைய கண்கள் உருகின. உடனிருந்த என் கண்கள் பனித்தன.

தேர்தல் நடக்கும் போதெல்லாம் ஓட்டுச்சாவடிகளில் பெண்கள் கூட்டம் நிறைந்து நின்றால், அங்கே வெற்றி அ. இ. அ. தி. மு. க.விற்குத்தான் என்று மக்கள் சொல்வது வழக்கம்! அந்த அளவுக்குப் பெண்களின் பெருமதிப்பை, தாய்க்குலத்தின் ஆசியை அடைந்த தனிப்பெருந் தலைவர் எம். ஜி. ஆர்.

எங்களுடைய நட்பில் மிக முக்கியமானதாகத் திகழ்ந்த ஒன்று — எங்களுடைய சாப்பாட்டு ரசனை. ஒரு சிற்றுண்டி யையோ, உணவையோ மிகவும் ரசித்துச் சாப்பிட வேண்டும் என்றால் அவருடன்தான் அமர்ந்து சாப்பிட வேண்டும்.

காலை நேரமானால் சுடச்சுடப் பூப் போன்ற இட்லியும் — புத்துருக்கு நெய்யும் — மிளகாய்ப் பொடியும் வரும். மாலை நேரமானால் அருமையான பாசந்தியும் முந்திரிப்பருப்பும் வரும். நேரத்தோடுதான் உண்பார். ஆனால், அதை எல்லோருடனும் அமர்ந்து ரசித்து, இனிமையைப் பகிர்ந்து கொண்டு சாப்பிடுவார். அங்கே உள்ள ஒவ்வொருவர் இலையையும் கவனித்து, அவர் எதை விரும்பிச் சாப்பிடுகிறாரோ, அதை மறுபடியும் கொண்டு வந்து போடச் சொல்வார்.

சாப்பிடும்போது அவர் உயர்வுதாழ்வு பாராட்டிய தில்லை. அந்தப் பெருந்தன்மையை நான் பலமுறை கண்டிருக்கிறேன். தலைமைச் செயலகத்தில் அவருடைய கூட்டத்தில் பங்கு கொள்ளும் செயலாளர்கள், உதவி யாளர்கள் எல்லோருக்குமே அறுசுவை உணவு கிடைக்கும். தோட்டத்தில் அவரை நான் சந்திக்கப் போனபோது, மதிய உணவில், பல்லாண்டு காலமாக என்னுடைய காரை ஓட்டும் — நான் ஒரு நண்பராகவே மதித்துப் பழகும் முகம்மது, அவருடன் — அவருக்கு எதிரே உட்கார்ந்து ரசித்து ருசித்துச் சாப்பிட்டிருக்கிறார்.

ஆனால், இப்படிப் பலவிதமாகவும், சத்து நிறைந்த தாகவும் சிற்றுண்டிகளையும், உணவு வகைகளையும்

சாப்பிட்டாலும், அவருடைய உடற்கட்டு — இளமைத் தோற்றம் எதுவும் தளர்ந்ததே இல்லை. இதற்குக் காரணம் அவருடைய கடுமையான தேகப்பயிற்சிதான்.

அமெரிக்காவுக்குப் பலமுறை சென்றிருக்கிறார் எம். ஜி. ஆர். (எல்லாப் பயணங்களிலும் நான் உடன் செல்வேன்.) கட்சித் தலைவராகவும், தமிழக முதல்வராக வும் அவர் சென்றதுண்டு. அங்கே அவ்வளவு சுற்றுப் பயணங்களிலும் சலிப்பின்றி முகமலர்ச்சியுடன் விளங்குவார் அவர். அதன் முக்கியமான ரகசியம், அந்த நாட்டிலும் அவர் உடற்பயிற்சியை, ஒருநாள் கூட விடாமல் செய்தது தான்.

அவருடைய வீட்டில் இந்தத் தேகப்பயிற்சி இடை விடாமல் நடக்கும். உடம்பை அயர்த்தும் 'பார்' குழாய் களில் பயிற்சி — தோளை வலுப்படுத்தும் கரலாக்கட்டை களில் பயிற்சி — மார்பை விரிவாக்கி வயிற்றைச் சுருங்க வைக்கும் 'ஸ்பிரிங்கு' பயிற்சி — எல்லாம் சுமார் ஒரு மணி நேரம் அவரிடம் படாத பாடுபடும்! அனாயாசமாக ஆடி ஓடிப் பயிற்சியை முடிப்பார். வியர்வையில் குளித்துவிட்டு, அப்புறம் குளிர்ந்த நீரிலும் குளித்துவிட்டுப் புதுமலர்ச்சி யுடன் வந்து உட்காருவார்.

இந்தக் காட்சியை அவருடைய சென்னை இல்லத்தில் பார்த்தது போலவே, வெளிநாடுகளிலும் வேறுவிதமான பயிற்சிகளைச் செய்யும் காட்சியில் காண நேர்ந்தபோது நான் அதிசயப்பட்டு நிற்பேன். உடல் ஆரோக்கியத்தில் ஈடுபட்டிருப்பதைப்போல, உடல் மருத்துவத்தையும் ஒரு புனிதத் தொண்டாகக் கருதிப் பெருமதிப்பு அளித்தவர் எம். ஜி. ஆர்.

நான் எப்போது வெளிநாடுகளுக்குச் சென்றாலும், அதற்கு முன்பு அவரை அவருடைய இல்லத்துக்குச் சென்று சந்தித்து, ஆசிகளைப் பெற்றுக் கொண்டு தான் போவது வழக்கம். அதேபோல வெளிநாடுகளிலிருந்து திரும்பி

வந்ததும் என்னை அழைத்து உட்கார வைத்துப் பேசுவார். நான் சொல்லுவது அவ்வளவையும் கவனமாகக் கேட்பார். அதில் சில விஷயங்களை எடுத்துக் கொண்டு நுட்பமாக அலசுவார். அவருடைய ஆழ்ந்த பொது அறிவும், கூர்மை யான கண்ணோட்டமும் என்னை வியக்கச் செய்யும்.

கல்கத்தாவில் பாரதியார் விழாவில் கலந்துகொள்ள முதல்வர் எம். ஜி. ஆருடன் நான் ஹௌரா மெயிலில் உடன்சென்றபோது, அவருடன் நான் தனி 'கம்பார்ட் மெண்ட்'டில் பேசிக் கொண்டு போனேன். அவரிடம் அப்போது மனம் திறந்து பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

"அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இந்த பத்து ஆண்டுகளில் மகத்தான சாதனைகளைப் புரிந்திருக்கிறது. எளிய மக்களின் பிரச்சினைகளை மிக நுட்பமாகப் புரிந்து கொண்டு, தகுந்த முறையில் அவற்றை அணுகித் தீர்வு காண முயன்றிருக்கிறது. மேல் நாடுகளில் இதுபோன்ற ஒரு கட்சியின் சாதனைகளைச் சரித்திரமாக, வரலாற்றுக் கண்ணோட்டத்துடன், வருங்காலச் சந்ததி யாரின் பயனுக்காக அமைத்து வைக்கிறார்கள். அப்படி நீங்களும் செய்து வைக்கலாம் என்பது என்னுடைய கருத்து!" என்றேன்.

"உங்களுடைய யோசனை என்ன?" என்று கேட்டார் எம். ஜி. ஆர்.

"அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சியை ஒவ்வொரு நிலையிலும் எடுத்துக் காட்டப் புகைப் படங்களைக் கொண்டு ஒரு கண்காட்சியை ஏற்பாடு செய்யலாம். பிறகு அதைப் பாதுகாத்து வைக்கலாம். அதன் அடிப்படையையும் வளர்ச்சியின் பின்னணியையும், நோக்கங்களையும் வரலாற்றுப் பேரா சிரியர்களைக் கொண்டு ஆராய்ச்சி வடிவமான நூலாக எழுதச் செய்து, கட்சியின் தலைவர்கள் சிலரை வைத்து ஒரு குழு அமைத்துப் பரிசீலனை செய்து, புத்தகமாக வெளி யிடலாம். இந்த வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும்

நீங்கள் பங்கு கொண்டு, கோடிக்கணக்கான மக்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய சாதனைகள் கணக்கில்லாதபடியாக அமைந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் தொகுத்து ஒரு டாகுமெண்டரி பிலிம் உருவாக்கப்பட வேண்டும். நிரந்தரமான இந்த மூன்று அமைப்புகள், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரிய தொண்டை வருங்கால மக்கள் சரிவரப் புரிந்து கொள்ள உதவும் சரித்திரச் சான்று களாக அமையும்!'' என்றேன். அவருடைய புன்னகை நிறைந்த பாராட்டு, அதை அவர் ஏற்றுச் சிந்திக்கிறார் என்பதை உறுதிப்படுத்தியது.

இந்த மூன்று அமைப்புகளுக்குமே உதவ, இந்தச் சிறிய புத்தகம் பெரிதும் பயன்படும் என்பது என்னுடைய கருத்து!

அவருடைய முக்கியமான வெளிநாட்டுப் பயணங்களில் அவர் என்னை விரும்பி அழைத்துக் கொண்டு போயிருக் கிறார். அவருக்குத் துணையாகப் போனதில் எனக்கும் ஒரு பெருமை உண்டு. அவருடைய பொது அறிவையும், கூர்மையான கவனிப்பையும் அறிந்திராத சிலர், அவர் அதிகம் படிக்கவில்லை என்று சொல்லி அலட்சியமாகப் பேசக்கூடும். ஆனால், அவர் வெளிநாடுகளில், புகழ்பெற்ற அதிகாரிகளுடன், பல்கலைக்கழக மாணவர்களுடன், நிபுணர்களான மருத்துவர்களுடன் வியக்கத் தகுந்த முறையில் அவர் ஆங்கிலத்தில் உரையாடியதை நான் கண்டிருக்கிறேன்.

ஹூஸ்டனில் உள்ள புகழ்பெற்ற 'செயிண்ட் லியூக்' மருத்துவமனையில், டென்டன்கூலி என்ற உலகப் புகழ் பெற்ற இருதய அறுவை சிகிச்சை நிபுணர், நுட்பமாக ஆபரேஷன் செய்யும் நேர்த்தியைக் காண ஆசைப்பட்டார் எம். ஜி. ஆர். டாக்டர் கூலி அவரை மருத்துவமனைக்கு வரும்படி சிறப்பு அழைப்பு அனுப்பி இருந்தார். அதை ஏற்றுக் கொண்டு இருவரும் மற்ற அதிகாரிகளுடன் போனோம்.

டாக்டர் கூலி தினமும் பத்துப் பன்னிரண்டு இருதய அறுவை சிகிச்சைகளைச் செய்கிறார். ஒவ்வொன்றும் ஐந்தாறு மணி நேரம் நடைபெறுகின்றன. அவ்வளவையும் அவரே நேரில் இருந்து கவனிப்பதில்லை. சில நிமிடங்களே வந்து, மிக முக்கியமான இணைப்புகளைச் செய்து முடித்து விட்டுப் போகிறார். கூலியின் கைபட்டதால் அது அவருடைய சிறப்பு வைத்தியமாகவே திகழ்கிறது.

டாக்டர் கூலியைச் சந்தித்துப் பாராட்டினார் எம். ஜி. ஆர். அங்கே இருந்த மருத்துவ நிபுணர்களை, ''தமிழ்நாட்டுக்கு நீங்கள் கட்டாயம் வரவேண்டும் உங்களிடம் அறிவுரை பெற எங்கள் டாக்டர்கள் மிகுந்த ஆவலுடன் இருப்பார்கள்!'' என்று கேட்டுக் கொண்டார்.

அப்போது, மீண்டும் அமெரிக்காவுக்கு, மருத்துவ நிபுணர்களுடன் பழக முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ் நிலையில் எம். ஜி. ஆர். போக வேண்டி இருக்கும் என்று நான் நினைக்கவே இல்லை.

அன்று அந்த நிபுணர்களிடம் மருத்துவ நுட்பங்களை ஏதோ ஓர் ஆர்வத்துடன் கலந்து பேசியவர், இன்று புரூக்ளின் மருத்துவமனையில் தனக்கே வைத்தியம் செய்து கொள்ளப் போய், அறுவை சிகிச்சையும் செய்து கொண்டிருக்கிறார்.

அன்று அனாயாசமாக உடற்பயிற்சிகளைச் செய்து கொண்டிருந்தவருக்கு, இன்று உடல் இயக்கத்துக்காகவும், நாப் பழக்கத்துக்காகவும், பயிற்சிச் சிகிச்சை அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!

தனது அளவில்லாத மனோபலத்தால், தன்னம்பிக் கையால், உடல் உறுதியால், இந்த மிகச் சிக்கலான சோதனையைக் கடந்து வெற்றி கண்டிருக்கிறார் அவர். அவர் வணங்கிய தாய்க்குலத்தின் ஆசிகளும், அவர் பசியாற உணவிட்ட குழந்தைகளின் பிரார்த்தனைகளும், அவர் மதித்துப் போற்றிய பெரியவரின் அருளாசியும், அவருக்காக தமிழக மக்கள் தினந்தோறும் ஆலயங்களில் செய்த

பூஜைகளும் இதற்கு உறுதுணையாக நின்று உதவி இருக்கின்றன.

உடல் தேறி தமிழ்நாட்டுக்குத் திரும்பத் தயாராகிக் கொண்டிருக்கும் இந்த வேளையில், தமிழக மக்கள் அவருக்குத் தங்களுடைய உளங்கனிந்த அன்புப் பரிசாக மிகப் பெரிய தேர்தல் வெற்றியை அளித்திருக்கிறார்கள்.

தமிழகத்தில் தேர்தல் நடந்தபோது, நான் செய்த சுற்றுப்பயணத்தில், ஒவ்வோர் இடத்திலும் மக்கள் அவருக்கு அத்தகைய வெற்றியை அளிக்க ஆவலோடு காத்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன்.

தேர்தலுக்கு நிற்பதும், வெற்றி பெறுவதும் பெரிதல்ல. ஒரு மிகப் பெரிய தலைவரின் தனிப்பெருமையில் அந்தக் கட்சியே உயர்வு பெற்று வெற்றி காண்பதும் அதிசயம் அல்ல.

ஆனால், களத்துக்கு வராமலேயே மிகப்பெரிய தேர்தல் வெற்றியைக் கண்டவர்.

பத்தாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டே தான் நிறுவிய கட்சிக்கு அமோகமான தேர்தல் வெற்றியைத் தேடித் தந்தவர்—

எம். ஜி. ஆர். என்ற மக்கள் திலகமாக மட்டுமே இருக்கமுடியும்! அவருடைய சாதனை—உலக சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படக் கூடிய பெருமை வாய்ந்தது.

காலப்போக்கில் மக்கள் நினைவிலிருந்து மறைந்து விடக்கூடிய அரசியல் தலைவர்கள் மலிந்த இன்றைய உலகத்தில், தனக்காக என்றென்றும் நிலைத்திருக்கக் கூடிய புகழை அடைந்த அபூர்வ மனிதர் அவர்.

அதனாலேயே அவரைக் 'காலத்தை வென்றவர்' என்று அழைப்பது மிகவும் பொருத்தமானது என்று எனக்குத் தோன்றுகிறது...

---

டாக்டர் கூலி தினமும் பத்துப் பன்னிரண்டு இருதய அறுவை சிகிச்சைகளைச் செய்கிறார். ஒவ்வொன்றும் ஐந்தாறு மணி நேரம் நடைபெறுகின்றன. அவ்வளவையும் அவரே நேரில் இருந்து கவனிப்பதில்லை. சில நிமிடங்களே வந்து, மிக முக்கியமான இணைப்புகளைச் செய்து முடித்து விட்டுப் போகிறார். கூலியின் கைபட்டதால் அது அவருடைய சிறப்பு வைத்தியமாகவே திகழ்கிறது.

டாக்டர் கூலியைச் சந்தித்துப் பாராட்டினார் எம். ஜி. ஆர். அங்கே இருந்த மருத்துவ நிபுணர்களை, ''தமிழ்நாட்டுக்கு நீங்கள் கட்டாயம் வரவேண்டும் உங்களிடம் அறிவுரை பெற எங்கள் டாக்டர்கள் மிகுந்த ஆவலுடன் இருப்பார்கள்!'' என்று கேட்டுக் கொண்டார்.

அப்போது, மீண்டும் அமெரிக்காவுக்கு, மருத்துவ நிபுணர்களுடன் பழக முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ் நிலையில் எம். ஜி. ஆர். போக வேண்டி இருக்கும் என்று நான் நினைக்கவே இல்லை.

அன்று அந்த நிபுணர்களிடம் மருத்துவ நுட்பங்களை ஏதோ ஓர் ஆர்வத்துடன் கலந்து பேசியவர், இன்று புரூக்ளின் மருத்துவமனையில் தனக்கே வைத்தியம் செய்து கொள்ளப் போய், அறுவை சிகிச்சையும் செய்து கொண்டிருக்கிறார்.

அன்று அனாயாசமாக உடற்பயிற்சிகளைச் செய்து கொண்டிருந்தவருக்கு, இன்று உடல் இயக்கத்துக்காகவும், நாப் பழக்கத்துக்காகவும், பயிற்சிச் சிகிச்சை அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!

தனது அளவில்லாத மனோபலத்தால், தன்னம்பிக் கையால், உடல் உறுதியால், இந்த மிகச் சிக்கலான சோதனையைக் கடந்து வெற்றி கண்டிருக்கிறார் அவர். அவர் வணங்கிய தாய்க்குலத்தின் ஆசிகளும், அவர் பசியாற உணவிட்ட குழந்தைகளின் பிரார்த்தனைகளும், அவர் மதித்துப் போற்றிய பெரியவரின் அருளாசியும், அவருக்காக தமிழக மக்கள் தினந்தோறும் ஆலயங்களில் செய்த

டாக்டர் கூலி தினமும் பத்துப் பன்னிரண்டு இருதய அறுவை சிகிச்சைகளைச் செய்கிறார். ஒவ்வொன்றும் ஐந்தாறு மணி நேரம் நடைபெறுகின்றன. அவ்வளவையும் அவரே நேரில் இருந்து கவனிப்பதில்லை. சில நிமிடங்களே வந்து, மிக முக்கியமான இணைப்புகளைச் செய்து முடித்து விட்டுப் போகிறார். கூலியின் கைபட்டதால் அது அவருடைய சிறப்பு வைத்தியமாகவே திகழ்கிறது.

டாக்டர் கூலியைச் சந்தித்துப் பாராட்டினார் எம். ஜி. ஆர். அங்கே இருந்த மருத்துவ நிபுணர்களை, ''தமிழ்நாட்டுக்கு நீங்கள் கட்டாயம் வரவேண்டும் உங்களிடம் அறிவுரை பெற எங்கள் டாக்டர்கள் மிகுந்த ஆவலுடன் இருப்பார்கள்!'' என்று கேட்டுக் கொண்டார்.

அப்போது, மீண்டும் அமெரிக்காவுக்கு, மருத்துவ நிபுணர்களுடன் பழக முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ் நிலையில் எம். ஜி. ஆர். போக வேண்டி இருக்கும் என்று நான் நினைக்கவே இல்லை.

அன்று அந்த நிபுணர்களிடம் மருத்துவ நுட்பங்களை ஏதோ ஓர் ஆர்வத்துடன் கலந்து பேசியவர், இன்று புரூக்ளின் மருத்துவமனையில் தனக்கே வைத்தியம் செய்து கொள்ளப் போய், அறுவை சிகிச்சையும் செய்து கொண்டிருக்கிறார்.

அன்று அனாயாசமாக உடற்பயிற்சிகளைச் செய்து கொண்டிருந்தவருக்கு, இன்று உடல் இயக்கத்துக்காகவும், நாப் பழக்கத்துக்காகவும், பயிற்சிச் சிகிச்சை அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது!

தனது அளவில்லாத மனோபலத்தால், தன்னம்பிக் கையால், உடல் உறுதியால், இந்த மிகச் சிக்கலான சோதனையைக் கடந்து வெற்றி கண்டிருக்கிறார் அவர். அவர் வணங்கிய தாய்க்குலத்தின் ஆசிகளும், அவர் பசியாற உணவிட்ட குழந்தைகளின் பிரார்த்தனைகளும், அவர் மதித்துப் போற்றிய பெரியவரின் அருளாசியும், அவருக்காக தமிழக மக்கள் தினந்தோறும் ஆலயங்களில் செய்த

பூஜைகளும் இதற்கு உறுதுணையாக நின்று உதவி இருக்கின்றன.

உடல் தேறி தமிழ்நாட்டுக்குத் திரும்பத் தயாராகிக் கொண்டிருக்கும் இந்த வேளையில், தமிழக மக்கள் அவருக்குத் தங்களுடைய உளங்கனிந்த அன்புப் பரிசாக மிகப் பெரிய தேர்தல் வெற்றியை அளித்திருக்கிறார்கள்.

தமிழகத்தில் தேர்தல் நடந்தபோது, நான் செய்த சுற்றுப்பயணத்தில், ஒவ்வோர் இடத்திலும் மக்கள் அவருக்கு அத்தகைய வெற்றியை அளிக்க ஆவலோடு காத்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன்.

தேர்தலுக்கு நிற்பதும், வெற்றி பெறுவதும் பெரிதல்ல. ஒரு மிகப் பெரிய தலைவரின் தனிப்பெருமையில் அந்தக் கட்சியே உயர்வு பெற்று வெற்றி காண்பதும் அதிசயம் அல்ல.

ஆனால், களத்துக்கு வராமலேயே மிகப்பெரிய தேர்தல் வெற்றியைக் கண்டவர்.

பத்தாயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டே தான் நிறுவிய கட்சிக்கு அமோகமான தேர்தல் வெற்றியைத் தேடித் தந்தவர்—

எம். ஜி. ஆர். என்ற மக்கள் திலகமாக மட்டுமே இருக்கமுடியும்! அவருடைய சாதனை—உலக சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படக் கூடிய பெருமை வாய்ந்தது.

காலப்போக்கில் மக்கள் நினைவிலிருந்து மறைந்து விடக்கூடிய அரசியல் தலைவர்கள் மலிந்த இன்றைய உலகத்தில், தனக்காக என்றென்றும் நிலைத்திருக்கக் கூடிய புகழை அடைந்த அபூர்வ மனிதர் அவர்.

அதனாலேயே அவரைக் 'காலத்தை வென்றவர்' என்று அழைப்பது மிகவும் பொருத்தமானது என்று எனக்குத் தோன்றுகிறது...

---